சித்தாந்தசைவ

# மூன்ருவது மாநாட்டு மலர்

திருவெண்ணெய்நல்லூர்

சய — புரட்டாசி — 21.

உ

சிவமயம்.

திருச்சிற்றம்பலம்.

# மெய்கண்டசாத்திரம்

## 4. சிவஞானசித்தியார்

சுபக்கம்

ஸ்ரீ அருணந்திதேவநாயனுர்

1954.

திருவாவடுதுறையாதீனவெளியீடு — 88.

உ

சிவமயம்

திருச்சிற்றம்பலம்

# மெய்கண்டசாத்திரம்

ஸ்ரீ அருணந்திதேவநாயனார்

அருளிச்செய்த

# சிவஞானசித்தியார் சுபக்கம்

ஸ்ரீ சுப்பிரமணியதேசிகர் பதவுரை

ஸ்ரீ மாதவச்சிவஞானயோகிகள் பொழிப்புரை

மெய்கண்டார் யாண்டு

731.

திருவாவடுதுறையாதீன வெளியீடு — 88.

உ

சிவமயம்

திருச்சிற்றம்பலம்

# மெய்கண்டசாத்திரம்

ஸ்ரீ அருணந்திதேவநாயனார்

அருளிச்செய்த

# சிவஞான சித்தியார் சுபக்கம்

## பதவுரை பொழிப்புரை முதலியன

---

திருக்கயிலாயபரம்பரைத்திருவாவடுதுறையாதீனத்து

21-வது குருமஹாசந்நிதானம்

**ஸ்ரீ-ல-ஸ்ரீ சுப்பிரமணியதேசிகசுவாமிகள்**

கட்டளையிட்டருளியபடி

திருவாவடுதுறையாதீன வித்துவான்

**த. ச. மீனாட்சிசுந்தரம்பிள்ளையால்**

பல பிரதிகளைக்கொண்டு

பரிசோதித்துப் பதிப்பிக்கப்பெற்றன.



சய — புரட்டாசி.

## சித்தாந்தசைவ மாநாட்டு மலர்

1951 திருவுந்தியார்
திருக்களிற்றுப்படியார்.

1953 சங்கற்பநிராகரணம்.

1954 சிவஞான சித்தியார் சுபக்கம்
பதவுரை — பொழிப்புரை.

ஸ்ரீ வெங்கடேஸ்வர் பிரஸ், கும்பகோணம்.

உ

சிவமயம்.

# இப்புத்தகத்தில் அடங்கியுள்ளவை




இப்புத்தகம் வேண்டியவர்கள் ஆதீனம் லைபரெரியனுக்கு ரூ. 1—4—0 தபால் தலைகள் அனுப்பிப் பெற்றுக் கொள்ளவேண்டும்.



திருக்கயிலாயபரம்பரைத் திருவாவடுதுறையாதீனத்து
இருபத்தொன்றாவது குருமகாசன்னிதானம்
ஸ்ரீ-ல-ஸ்ரீ சுப்பிரமணியதேசிக சுவாமிகள்

உ

சிவமயம்

திருச்சிற்றம்பலம்

# முன்னுரை

'சிவத்துக்குமேல் தெய்வம் இல்லை, சித்திக்கு மேல் நூல் இல்லை' என்பது ஒரு பழமொழி. 'சைவசமயமே சமயம்' எனவும் 'சைவத்தின் மேற் சமயம் வேறிலை அதிற்சார் சிவமாம், தெய்வத்தின் மேற்றெய்வ மில்லெனும் நான்மறை' எனவும் பெரியோர் அருளினர். பதி பசு பாசம் என்னும் முப்பொருள் ஆராய்ச்சி சித்தாந்த சைவத்தில் செய்யப்படும். முழுமுதற் பரம்பொருளைச் சிவம் எனவும், உயிர்களைப் பசு எனவும், அறியாமையைச் செய்யும் இருளைப் பாசம் எனவும் சைவசமயம் அறுதியிட்டுக் கூறும்.

இனி, மெய்கண்டதேவ நாயனர் அருளிச் செய்த சிவஞான போத நூலை நன்கு விரித்துத் தடைவிடைகளால் தெளிவிப்பது சிவஞானசித்தியார் என்னும் நூல். இதனை அருளிச்செய்தவர்கள் ஸ்ரீ அருணந்திசிவம். இது வழி நூல். பரபக்கம் சுபக்கம் என்னும் இரு பிரிவினை யுடையது. ஸ்ரீ மாதவச்சிவஞான யோகிகள் இதன் பெருமையைக் கண்டு 'சிவாகமார்த்தங்களுக்கெல்லாம் உரையாணி' என இதனைப் போற்றியருளினர். 'பார்விரிந்த நூலெல்லாம் பார்த்தறியச்சித்தியிலே ஓர் விருத்தப் பாதி போதும்' என்பது சிவபோகசாரம். 'பாதி விருத்தத்தால் இப்பார் விருத்தமாக வுண்மை—சாதித்தார் பொன்னடியைத் தான்பணிவ தெந்நாளோ' என்றருளினர் தாயுமான சுவாமிகள். சித்தியார் சுபக்கம் 328 திருவிருத்தங்களையுடையது. முதனூலாகிய சிவஞானபோதம் போலவே பிரமாணம், இலக்கணம், சாதனம், பயன் என நான்கு இயல்களாக வகுக்கப்பட்டுள்ளது. இந்நூலுக்கு ஆறு ஆசிரியர்கள் உரை கண்டனர். அவற்றுள் இரண்டு ஆசிரியர்கள் செய்தருளிய உரையே இதன்கண் வைக்கப்பட்டுள்ளன. ஏனைய 'அறுவருரை' என வேறு தனிப்புத்தகமாக வெளிவரவிருக்கின்றது. இதனைப் பற்றிய விவரங்களையெல்லாம் முகவுரையிற்காண்க.

சிவமயம்

# முகவுரை

**பரசமய கோளரியைப் பாலரு வாயனைப்பூம் பழனஞ் சூழ்ந்த**
**சிரபுரத்துத் திருஞான சம்பந்தப் பெருமானைத் தேய மெல்லாம்**
**குரவையிடத் தமிழ்வேதம் விரித்தருளும் கவுணியர்தங் குலதீபத்தை**
**விரவியெமை யாளுடைய வென்றிமத விளங்களிற்றை விரும்பி வாழ்வாம்.**

— *ஸ்ரீ மாதவச்சிவஞானயோகிகள்.*

'சிவஞானசித்தியார்' என்பது மெய்கண்டசாத்திரங்கள் பதினான்கனுள் ஒன்று. இதனை "உந்திகளிறுஉயர் போதம் சித்தியார்" என்னும் வெண்பா நன்குணர்த்தும். மெய்கண்டசாத்திரங்களைச் சித்தாந்த சாத்திரங்கள் எனவும் பெரியோர் கூறுவர். இதனைத் தமிழகத்துக்குத் தந்தருளிய ஆசிரியர் ஸ்ரீ அருணந்திதேவநாயனார். இவர்கள் சந்தான குரவருள் இரண்டாமவராக வைத்துப் போற்றப்பெறுவார்கள். இவர்களுடைய **ஞானாசிரியர் ஸ்ரீ மெய்கண்ட தேவநாயனார்.** ஸ்ரீ மெய்கண்டதேவநாயனாருடைய மாணவர் நாற்பத்தொன்பதின்மருள் இவர்கள் முதல் மாணவர். வடமொழி தமிழ்மொழிகளில் வல்லவர், வேத சிவாகமங்களிலும் உபாகமங்களிலும் பெரிதும் வல்லராய்க் கற்றுச் சிறந்திருந்தமையின் இவரைப் பெரியோர் சிறப்பித்துச் **சகலாகமபண்டிதர்** என்னும் பட்டம் தந்து பாராட்டினர். பெற்றோர் இட்டுவளர்த்த பிள்ளைத்திருநாமம் இன்னதெனத் தெரியவில்லை. **அருணந்தி** என்பது தீட்சாநாமம். மெய்கண்டதேவருடைய காலம்

( கி-பி 1223 ) பதின்மூன்றும் நூற்றாண்டின் முற்பகுதியென ஒருவாறு ஆராய்ச்சியாளர்களால் துணியப்பெற்றுளது. ஆகலின், இவ்வாசிரியர் காலமும் அதுவேயாம். மூன்றும் இராசராசன் ஆட்சிக்காலத்துப் பதினொந்தாம் ஆண்டுக் கல்வெட்டால் இது குறிக்கப்படுவதென்பர். இவர்களுடைய அவதாரத்தலம் திருத்துறையூர். இவர்கள் சிவபரிபூரணமுற்றதும் இத்தலத்திலேதான். இவர்கள் சமாதிக்கோயிலும், திருமடமும் திருக்கயிலாயபரம்பரைத் திருநந்திமரபு மெய்கண்டசந்தானத்துவந்த இத்திருவாவடுதுறையாதீனத்துக்கே இன்றும் உரிமையாகவுள்ளன. அக்குருமூர்த்தத்துக்கு நித்திய நைமித்திக பூசைகளும் குருபூசைப்பெருவிழாவும் இவ்வாதீனத்தாராலேயே சிறப்பாக நடந்துவருகின்றன. இவ்வாசிரியர் தமது ஞானாசிரியருடைய ஆணைப்படி தமிழ்ச் சிவஞானபோதத்துக்குச் சிறந்ததோர் பேருரை விருத்தச்செய்யுட்களாற் செய்து முடித்தருளினர். சிவஞானம் சித்தித்தற் பொருட்டாகச் செய்யப்பட்டமையின் இது **சிவஞானசித்தி** என்னும் பெயருடையதாயிற்று என்பர். இஃது இந்நூலுக்கு ஆசிரியர் இட்டபெயர்.

**திருக்கோவையார்**, **திருவுந்தியார்**, **திருக்களிற்றுப் படியார்** என்பன போல இந்நூலும் **சிவஞானசித்தியார்** என வழங்கிவருகின்றது. இதன் பெருமை கருதிச் சிவ போகசாரம் அருளிச்செய்த ஸ்ரீ குருஞானசம்பந்ததேசிக மூர்த்திகள் "பார்விரித்த நூலெல்லாம் பார்த்தறியச் சித்தியிலே, ஓர்விருத்தப் பாதிபோதும்" என்றருளினார்கள். தவயோகிகள் போற்றும் சிவயோகிகளாக விளங்கிய தாயுமானசுவாமிகளும் "பாதிவிருத்தத்தால் இப் பார் விருத்தமாக வுண்மை, சாதித்தார் பொன்னடியைத் தான் பணிவதென்னாளோ" என்று பாராட்டினார்கள். 'ஓதரிய

வாய்மைச் சிவாகமங்கட்கெலாம் உற்றபேராகரமதாய்-ஓங்கு திருவாவடுதுறைப்பதியில் அற்புதத்தொருவடிவு கொண்டருளியே, பேதமுறு சமயவாதிகள் உளமயக் கைப் பெயர்க்கும் ரசகுளிகையாகிப் — பிரியமுடனே வந்தடுத்தவர்க்கு இன்பப் பெருங்கருணை மேருவாகி, ஆதரித் தடியேங்கள் உண்ணத் தெவிட்டாத அமிர்தசாகர மாகியே—மணிவிளக்கென வளர்' ஸ்ரீ மாதவச்சிவஞான யோகிகள் இதனை, "சிவாகமார்த்தங்களுக்கெல்லாம் உரை யாணி" எனப் போற்றியருளினர். அடியேங்கள் இச் சிவஞானசித்தியைப் போற்றுவதைத்தவிர்த்துவேறென்ன செய்யவல்லேம். ஞானாசாரியர்திருவடிகளைச்சென்னிமேற் கொண்டு சிந்தித்திருப்பதே சிவஞானசித்தியை அடையத் தக்க சாதனமாம் என்க. தாய் அழகுடையவள் என மைந்தன் கூறமாட்டான். அவள் அழகுடையவள் எனக் கூறுபவன் மைந்தனுகமாட்டான். தாய் 'தெய்வக் கற்புடையவள்' என்பதே தகுதி. அதுவே மரபுமாம். ஆசிரியர் புத்திமான் என வினை வழித்தோன்றிய நாம் கூறலாமா? பண்டை நற்றவத்தால் தோன்றிய பெரி யோரைப்பற்றி ஆராயும் தூயகருவி கரணங்களை நாம் பெற்றிலோமே! அவர்கள் அருளை நினைந்து நினைந்து கும்பிட்டிருத்தலொன்றே நாம் செய்யத்தக்கதாம்.

இனி, சிவஞானசித்தியார் என்னும் இந்த ஞானநூல் பரபக்கம், சுபக்கம் என இரு பகுதியினையுடையது. பர பக்கம் – 301 திருவிருத்தங்களையும், சுபக்கம் – 328 திரு விருத்தங்களையும் கொண்டுளது. பரபக்கத்தில் உலகாயத முதலிய பதின்மூன்று பரசமயங்களின் உண்மையை எடுத்துக்கூறி அவற்றைச் சித்தாந்த சைவநெறியில் நின்று மறுத்துரைக்கும் மறுதலைகளும் உடன் அருளிச்செய்யப் பட்டுள்ளன. சுபக்கத்தைக் கூறவந்த ஆசிரியர் 'பர

மதத்தை நிராகரியாதிருக்கில் தன் மதம் பிரதிட்டை ஆகாது ' என்னும் நியாயத்தால் பரமதங்களையும் எடுத்து ஆராய்ந்து அவைகளைச் சித்தாந்தப்பார்வையால் மறுத்துரைத்திருக்கிறார்கள், ஏனைய மதங்களையும் தத்தம் மதத்தோடு வைத்து ஒப்புநோக்கும்போதுதான் அவைகளின் வன்மை மென்மைகள் நன்கு புலப்படும். மிருகேந்திரம் முதலிய உபாகமங்கள் பரசமயங்களையும் எடுத்து ஆராய்வன என்பர் பெரியோர். இரௌரவ ஆகமத்தின்கண் உள்ள இரண்டரை சுலோகங்களை ஆதரவாகக்கொண்டு ஸ்ரீ சத்தியோஜோதி சிவாசாரியர் பரமோக்ஷநிராச காரிகை என்னும் நூலை இயற்றியருளினர். இந்நூல் 60 சுலோகங்களால் செய்யப்பட்டுளது.

" அந்நியர்களுக்கு அராகம் முதலான மேலானதத்துவங்கள் கூறப்படாமையால் பொருளில் குறைந்திருக்கும் தன்மை யிருக்கின்றது. ஆகையால், அந்நிய மதங்களை அறிந்தவர் மாயையைக் கடவாமைபற்றி உலகங்களிலே இருக்கின்றனர்" என்பதாம். (58 சுலோ.)

(உரை)" எல்லாப் பிரமாணங்களும் எல்லாவற்றையும் விடயமாகக்கொள்ளவேண்டும் என்பதில்லை. சிலவிடயங்களையே விளக்குகின்ற பிரத்தியட்சம் முதலியவை போல் ஏனைய நூல்களும் பிராமாணியங்களேயாம். அவற்றிற்குச் சிலவிடயங்களையே அறிவிக்கும் தன்மை உண்டு என்பது எவ்வாறு? என்பார்க்கு, "அராகதத்துவம் முதலிய மேலானதத்துவங்கள் கூறப்படாமையால்" என்பதனால் விடை கூறப்பட்டது. அராகதத்துவம் முதலிய எல்லாத்தத்துவக் கூட்டங்களையும் கூறாமையால் அவர்களுக்குச் சிலவிடயங்களை அறியும் தன்மையே இருக்கின்றது. இவ்வாறாயின், ஏனைய ஆகமங்களால் அடையப்படு

வதுயாது? என்பார்க்கு ''ஆகையால்மாயையைக்கடவாமை பற்றி'' என்பதனுல் விடை கூறப்பட்டது. அராகதத்துவம் முதலிய மேலான தத்துவங்கள் ஒன்றும் அவர்களால் அறியப்படாமையால் மாயாதத்துவத்திற்குக் கீழே அறிவையுடைய அந்நிய மதத்தைச்சார்ந்த முத்தர்கள் தத்துவங்களிலுள்ள புவனக் கூட்டங்களில் ஒடுக்கமடைந்திருக்கின்றனர். எவரெவருக்கு எந்த எந்தத்தத்துவ புவனத்தில் ஒடுக்கம் என்னும் விடயத்தை ஆகமப் பிராமாணியம் என்னும் நூலில் விரிவாகக் கூறப்பட்டுள்ளமை காண்க''.

''இவ்வாறு வாதிகளால் கூறப்பட்ட பயன்கள் அனைத்தும் அவற்றின் சாதனங்களில் மாணவகருக்குப் பிரவிருத்தி யுண்டாகாமை என்னும் பயனைக்கருதிச் சுருக்கமாய் நம்மால் கூறப்பட்டன'' (சுலோ—59)

(உரை) ''எல்லாவாதிகளுக்கும் நிச்சயங்களாய் உள்ள முத்திருபங்களான பயன்கள் அனைத்தும் சுருக்கமாய்க் கூறப்பட்டன. அவை அனைத்தும் எதன் பொருட்டு மறுக்கப்பட்டன? எனில், முத்திப்பயன்களுக்குச் சாதனமான சாத்திரங்களை நிச்சயம் செய்யாமல் தாழ்ந்த பயனில் பிரவிருத்திக்கின்றனர். சிரேயசை (மேலானமுத்தியை) விரும்புகின்றவர்கள் அயோகவியவச்சேதத்தால் (இயைபின்மை நீக்குதல்) இவ்விட (சித்தாந்த சாத்திர)த்தில் பிரவிருத்திக்கத்தக்கது; சிறந்த மோட்சம் இதனுல்தான் அடையப்படுகின்றது. ஆகையால், என்க''. என மேற்கண்ட நூலின் இறுதியில் அறுதியிட்டுக் கூறுவதால் இனிது புலப்படும்.

இனி, ஆசிரியர் அருணந்திதேவநாயனுர் சுபக்கத்துத் தொடக்கத்தும் விநாயக வணக்கம் கூறியருளுகின்றுர்

கள். இஃது ஆன்றோர் ஆசாரம் பாதுகாத்தலாம். மங்கல வாழ்த்தில் சிவபிரான் வணக்கம் 2 முதனூற் சிறப்பு. 3 நுதலிய பொருள் முதலியன, 4 அவையடக்கம், 5 ஆசங்கை நீக்கல் ஆக ஐந்து செய்யுட்கள் உள்ளன. பரபக்கத்துள்ளும் இவ்வாசிரியர் காப்புக் கூறிய பின் மங்கலவாழ்த்தில் சிவபிரான், சத்தி, விநாயகக்கடவுள், சுப்பிரமணியக்கடவுள், மெய்கண்டதேவநாயனுர் துதி, அவையடக்கம், நூற்சிறப்பு, நூற்கதிகாரி நூல்வழி நூற்பெயர், நூற்கருத்து முதலிய பத்துத்திருவிருத்தங்கள் அருளிச்செய்திருக்கின்றமை காண்க. எடுத்துக்கொண்ட பொருள் இடையூறின்றிக்கடைபோக இனிது முடிதற்கும், இந்நூல் நின்று நிலவுதற் பொருட்டும் விநாயக வணக்கமுதலியன கூறப்பட்டுள. அளவையின் இயல்புகள் பதினான்கு திருவிருத்தங்களாற் பேசப் பட்டிருக்கின்றன.

பிரமாண இயல் முதல் மூன்றுசூத்திரங்களாலும், இலக்கணஇயல் 4, 5, 6, சூத்திரங்களாலும், சாதனஇயல் 7, 8, 9 சூத்திரங்களாலும், பயனியல் 10, 11, 12 சூத்திரங்களாலும் உணர்த்தப்பட்டன.

'பதி பசு பாசம் எனப்பகர் மூன்றிற், பதியினைப் போற் பசு பாசம் அநாதி, பதியினைச் சென்றணு காபசு பாசம், பதியணு கிற்பசு பாசம் நிலாவே' என்பது திருமந்திரம்.

இனி, அளவையிலக்கணம் கூறிய ஆசிரியர் அவ்வளவைகளான், உரைப்படும் பதி பசு பாசம் ஆகிய முப்பொருள்களது உண்மை முதல் மூன்று சூத்திரங்களான் உணர்த்துவாராயினர். அவற்றுள், முதற்சூத்திரத்திற் பதியுண்மையும், இரண்டாம்சூத்திரத்திற் பாசவுண்மையும், கூறப்பட்டன. முதற்சூத்திரத்திலே உலகிற்கு நிமித்த

காரணுகிய பதியுண்மைக்கு அளவை கூறிய ஆசிரியர் காரணமாதற்பொதுமையான் துணேக்காரணம் முதற் காரணங்களது உண்மைக்கு அளவையும், அவற்ருற் காரி யப்படுமாறும் இரண்டாஞ் சூத்திரத்திற் கூறுகின்ருர். முதற்காரணம் மாயை, துணேக்காரணம் சிற்சத்தி. பசு வுண்மைக்குப்பிரமாணம் மூன்ருஞ்சூத்திரத்திற் கூறுகின் ருர்.

முதல் மூன்றுசூத்திரங்களாலும் பொருளுண்மைக்கு அளவு கூறிய ஆசிரியர் நிறுத்த முறையானே எதிர் நிரனிறையாகப் பொருளியல்பு கூறுவான் தொடங்கி நான் காஞ்சூத்திரத்திற் பசுவிலக்கணமும், ஐந்தாஞ்சூத்திரத்திற் பாசஇலக்கணமும், ஆருஞ்சூத்திரத்திற் பதியிலக்கணமும் அருளிச்செய்தார்,

வேண்டுஞ்செய்தி முறைமை யெனப்படும் சாதன வியல்பு கூறத்தொடங்கிய ஆசிரியர் மேற்கூறிப்போந்த முப்பொருள்களுள் சாதித்துப் பெறுதற்குரிய அதிகார முடையது இது என்பது பாரிசேட அளவையின்வைத்து ஏழாஞ்சூத்திரத்திற் கூறினர். சாதித்துப் பெறும் உரிமை தனக்கே உண்டு என்பதை உணர்ந்த உயிர்க்கு அப்பேறு தனக்கு வேண்டற்பாலதென்பதும், பிறவும் எட்டாஞ் சூத்திரத்தால் உணர்த்தியருளினர். அப்பேறு பயப்பதாய சாதனம் செய்யுமாறு ஒன்பதாஞ்சூத்திரத்திற் கூறினர்.

இனி, அச்சாதனத்தாற் பெறப்படும் பாசநீக்கமும் சிவப்பேறும் ஆகிய பயனியல்பு கூறத்தொடங்கிப்பெத்த நீக்கம் ஆமாறு பத்தாஞ்சூத்திரத்தானும், சிவப்பேறு எய்துமாறு பதிஞெராஞ்சூத்திரத்தானும் உணர்த்தினர். முறையே பாசநீக்கமும் சிவப்பேறும் ஆகிய பயன்பெற் ருர்க்குச் சீவன் முத்திநிலேக்கண் நிகழும் இயல்பு பன் னிரண்டாஞ்சூத்திரத்தாற் கூறியருளினர்.

இனி, முன்னூற் சிறப்புக்கூறும் முகத்தால் தமது ஞானசாரியராகிய ஸ்ரீ மெய்கண்டதேவர் திருவடி தீட்சை செய்து தம்மை ஆட்கொண்டருளியமையும், சிவஞான போதத்தைத்தமக்கு உபதேசித்தமையும், அந்நெறிபற்றித் தாம் சைவாகமப் பொருட்கூற்றை விளக்குகின்றமையும் அருளியிருக்கின்றனர். சிவபிரானது திருவடி கூடும் முறைமையாகிய பயனைக்கூறுமிடத்துச் சாமுசித்தருக்கும் பிராகிருதருக்கும் இந்நூல் பயன்படாது. ஏனெனில் சாமுசித்தராவார் முற்செய்தவ விசேடத்தால் பிறக்கும்போதே நின்மல அந்தக்கரணத்துடன் பிறந்து முதல்வனிடத்தே வீடுகாதலித்துப் பத்திபண்ணுபவர். இறைவன் அவரை நூல் வழியானன்றிச் சிவகதியிற் சேர்த்துவன். ஏனைப்பிராகிருதர் அறிவும் ஆற்றலும் காதலுமில்லாதவர். ஆகலின், அவர்க்கும் நூல் வேண்டுவதின்று. மந்ததர முதலிய சத்திநிபாதமுடைய வைநயிகருக்கே இந்நூல் கூறப்படுகின்றது என ஆசிரியர் கூறுகின்றனர். பண்டை நற்றவம் என்றது வீடுபேற்றுக்குரிய தவமாம். அஃது இறப்பில் தவம் என்றபடி; அது சரியை கிரியை யோகங்களின் முடிந்த ஞானம். 'ஞானம் ஈசன்பா லன்பே' என்றமை காண்க. அஃது ஆராய்ச்சியின்றி எழும் எழுச்சியாம். குறிக்கோளின்றி நிகழ்வதும் அது. முனைத்துத்தோன்றாமை யாகிய 'தாழ்வெனுந்தன்மை' என்பர். 'முன்புசெய்தவத் தினீட்டம் முடிவிலா இன்பமான அன்பினை எடுத்துக் காட்ட' எனச் சேக்கிழார் சுவாமிகள் கண்ணப்பநாயனார் புராணத்து அருளியமையும் சிந்தித்தற்குரியது.

இனி, தத்துவங்கள் இன்றியமையாமைபற்றி எழுந்தன. தத்துவங்களை நோக்கியே சமயங்கள் உண்டாயின. ''தத்துவஞானம் தலைப்பட்டவர்கட்கே, தத்துவஞானம்

தலைப்படலாய் நிற்கும்'' எனவும், "ஆகின்ற தொண் ணூறோ டாறும் பொதுவென்பர், ஆகின்ற வாறு றருஞ் சைவர் தத்துவம். ஆகின்ற நாலேழ் வேதாந்தி வயிண வர்க், காகின்ற நாலா றையைந்து மாயாவாதிக்கே'' எனவும் திருமந்திரம் கூறும். தத்துவாதீத சமயம் சித்தாந்த சைவமேயாம். சமயாசாரியர்களையும் சந்தானசாரியர் களையும் வரம்பில் வைத்துச் சிந்தித்துணர்தல் வேண்டும். பிற ஆசிரியர்களெல்லாம் உஜ்ஜீவிக்க வழிகண்டனர். விரிந்த தத்துவங்களையுடையது சைவம். ஆகலின், 'ஆகின்ற ஆறுறு **அருஞ்சைவர்** தத்துவம்' எனத் திருமூல தேவர் அருளினர். கடவுள், சமயம், ஆசாரியர், சாத்திரம் எல்லாம் சைவசமயத்திற் சிறந்து விளங்குவன. நல்ல குணங்கள் பழக - பதியப் பெரியோரை அணுகவேண்டும். எளியராந்தன்மையொன்றே அருளைப்பெற இன்றியமையா தது. ஆண்டவன் முன் சிறுமையுடையவராய் ஒழுகுதல் வேண்டும். அடியார் முன்பும் அப்படியே நடத்தல் வேண்டும். 'ஆசையொடும் அரனடியார் அடியாரை அடைந்திட்டு, அவர் கருமம் உன்கரும மாகச் செய்து, கூசி மொழிந்து, அருண்ஞானக்குறியில் நின்று, கும்பிட் டுத் தட்டமிட்டுக் கூத்தாடித்திரியே' ( பக் - 585 ) என்னும் பகுதியும் நோக்கியுணர்க. பண்பாட்டால், சமய நலங்களால்தான் மன ஒருமை உண்டாம். சமயநலங்கள் உயிருணர்வில் தோய்ந்து தோய்ந்து வளர இடந்தர வேண்டும். சமயமே மக்கள் வாழ்வுக்கு உயிராம். சமயநலமில்லாத மக்கள் உயிர் நீங்கிய உடம்புபோன்ற வரே யாவர். மனத்தை ஒருமுகப்படுத்துதலே சமயநெறி. மக்களைச் செம்மைசெய்வது சமய ஒழுக்கம். மக்கள் உணர்வில் உறைத்து மிகுவதே சமயம் என்பர். அவ் வெழுச்சியும் உணர்வும் பரிபாகத்துக்குத் தகவே உண்

டாம். அருளே உயிரைச் செம்மைசெய்யும். அருளாற்றல் பெருக இறைநலம் பெருகச் செய்யவேண்டும். ஆள்வாரிலி மாடாக ஆதலாகாது. சிவஞான விளைவுபெற நன்னெறியைக் கைக்கொண்டு வாழ்தல் அவசியம். நன்னெறி - சன்மார்க்கம். மிக்காரைக்கண்டு தாழ்தல் வேண்டும். கனமுள்ள பொருளே தாழும். பாசகனம் கூடாது, சித்கனமே வேண்டும்.

இனி, சிவஞானச்செய்தியுடையோர் ஈசன் நேசரொடும் செறிந்திட்டு, அவர் திருவேடம், ஆலயங்கள் எல்லாம் அரன் எனவே தொழுது, இறைஞ்சி, ஆடிப் பாடி, எங்கும் யாம் ஒருவர்க்கும் 'எளியோமல்லோம் : யாவர்க்கும் மேலானோம்' என்று இறுமாப்பெய்தி, திங்கள் முடியார் அடியார் அடியோம் என்று திரிந்திடுவர் (பக் - 583). 'ஈனர்கட்கெளியேனலேன் திருவாலவாயரன் நிற்கவே' என்னும் ஆளுடையபிள்ளையார் திருவாக்குண்மையும், 'யாமார்க்கும் குடியல்லோம் யாதுமஞ்சோம்'' 'நாமார்க்கும் குடியல்லோம் நமனையஞ்சோம்' 'இறுமாந்திருப்பன் கொலோ ஈசன் பல்கணத் தெண்ணப்பட்டு' என்னும் திருவாக்குக்களும் சிவஞானச் செயலுடையோர் தன்மையை நன்கு விளக்குவனவாம். 'இந்திரிய மெனைப் பற்றி' (பக்க - 537) என்னும் திருவிருத்தம் திருநாவுக்கரசு சுவாமிகள் அருளிச்செய்த 'பொய்ம்மாயப் பெருங்கடலிற் புலம்பாநின்ற புண்ணியங்காள்' என்பனபோன்ற தோத்திரப் பெருமையை நன்கு தெளிவிக்கும்.

"இத்தன்மை யரம்பையர்கள் எவ்விதமும் செயல்புரிய
**அத்தனார் திருவடிக்கீழ் நினைவகலா வன்புருகு**
**மெய்த்தன்மை யுணர்வுடைய விழுத்தவத்து மேலோர்தம்**
**சித்தநிலை திரியாது செய்பணியின் தலைநின்றார்''.**

"இம்மாயப் பவத்தொடக்காம் இருவினைகள் தமைநோக்கி
உம்மாலிங் கென்னகுறை யுடையேன்யான் திருவாரூர்
அம்மானுக் காளானேன் அலையேன்மின் நீரென்று
பொய்ம்மாயப் பெருங்கடலுள் எனுந்திருத்தாண் டகம்
[புகன்றார்"

என்ற சேக்கிழார்பெருமான் அருளிச்செயல் சாத்திரவுண்மையை எத்துணை வலியுடையதாகச்செய்கிறது. விரிக்கிற் பெருகும்,

இனி, சிவஞானசித்தியார் 'ஆகமவுணர்வின் பிழிவு' என்பது மட்டுமல்ல. அநுபவவுணர்வின் சிகரமும் அது. பெரிய புராணத்தை வரலாற்று நூல் என்பேமா? ஒழுக்க நூல் என்பேமா? அஃது அநுபவவுணர்வின் சாரமாகிய நூலின் சிகரம் என்பதே சாலும். சிவஞானசித்தியாரென்னும் இச்சாத்திர நூலுக்குஉரைகண்டார் ஆறுஆசிரியன்மார். அவ்வுரைகள் 'அறுவருரை' என்னும் தொகுப்புடன். 66 ஆண்டுகட்கு முன் அச்சிடப்பெற்றுள்ளது, ஆயினும், அது கிடைப்பது பெரிதும் அரிதாயிற்று. இதனையடுத்து அவ்வுரைகளின் தொகுப்பு ஆதீன வெளியீடாக வரவுள்ளது.

சிவஞானசித்திக்கு உரைகண்டார் அறுவரில் **ஸ்ரீ மறைஞானதேசிகர்** என்பார் ஒருவர். இவர், சிதம்பரம் கண்கட்டி - மறைஞானபண்டாரத்தின் மாணவர். சீகாழிப்பதியினர். பரம்பரைச்சைவேளாண் குலத்தவர் அந்தணர் மரபினர் என்பர் ஒருசாரார். ஆராய்தற்குரியது. வடமொழி தமிழ்மொழியில் வல்லவர். இவர் உரையில் ஆகமங்கள் பலவற்றினின்று மேற்கோள்கள் காட்டப்பட்டுள்ளன. தமிழ் நூல்களிற் பல எடுத்துக்காட்டாக வுள. அளவைநூல் ஒன்று இவர்காலத்துப்பிரசித்தமாக

வழங்கப்பட்டதுபோலும், அளவையிலக்கணவுரைப்பகுதியில் அந்தநூலைப் பெரிதும் இவர் எடுத்தாண்டுள்ளனர். இவர்காலம் பதினாறும் நூற்றாண்டு என்பர்.

ஸ்ரீ ஸ்கந்தபரம்பரை வாமதேவ சந்தானம் சூரியனார் கோயில் ஆதீனத்து இரண்டாவது குருமஹாசந்நிதானம் **ஸ்ரீ சிவாக்கிரயோகிகள்** ஓர் உரையியற்றியருளினர். இவர்கள் தொண்டைநாட்டில் அவதரித்தவர்கள். அந்தணர் மரபினர். சூரியனார் கோயில் ஆதீனத்தை யடைந்து பிரதம பரமாசாரியராகிய ஸ்ரீ சிவக்கொழுந்தாசாரியர்பால் சிவஞானோபதேசமும், சைவசந்நியாசமும், ஆசாரியாபிஷேகமும் பெற்றுவிளங்கினர். திருவீழிமிழலையில் வசித்துவந்தமையின் வீழிச்சிவாக்கிரயோகிகள் எனவும், வருணாச்சிரம அதீதராக விளங்கினமையின் அதிவர்ணாசிரம சிவாக்கிரயோகிகள் எனவும் பெயர் பெற்றனர். இவர்கள் சைவசந்நியாசபத்ததி, சிவாக்கிரபத்ததி என்னும் கிரியாதீபிகை, வடமொழிச் சிவஞானபோதத்துக்குச் சங்கிரக வியாக்கியானம் என்னும் சிற்றுரை சிவாக்கிரபாஷ்யம் என்னும் பேருரை முதலியன வடமொழியிலேயே இயற்றியருளினர். சர்வ ஞானோத்தரத்தின் ஞானபாதத்துக்கு அகோரசிவாசாரியர் செய்த சிவசமவாதவுரையை சிவாக்கிர பாஷ்யத்திலே மறுத்தருளினர். சைவபரிபாஷை என்னும் வடமொழி நூலொன்றும் செய்தனர். சர்வஞானோத்தரம், தேவிகாலோத்தரம், அரதத்தாசாரியர் செய்த சுருதிசூக்திமாலை முதலியவைகட்குத் தமிழுரையும் செய்திருக்கின்றனர். இருநூற்றுப்பதினைந்து திருவிருத்தங்களையுடைய சிவநெறிப்பிரகாசம் என்னும் சித்தாந்த நூல் ஒன்றும் தமிழில் அருளிச் செய்தனர். இவர்கள் காலம்—கி-பி 1564 என்பர்.

சிவாக்கிரயோகிகள் உரையில் வடமொழி நூல்களின் மேற்கோள் நிறைந்துள்ளன. மணிப்பிரவாள நடையில் அமைந்த இவ்வுரையே சித்தியாருக்குள்ள உரைகளில் முற்பட்டதென்பர் பெரியோர். இதுவும் ஆராய்தற்குரியது.

இனி, திருவண்ணுமலை யாதீனத்து ஸ்ரீ **ஞானப்பிரகாச முனிவர்** என்பவர் ஓர் உரையியற்றியுள்ளனர். ஞானப்பிரகாசமுனிவர் யாழ்ப்பாணத்துத் திருநெல்வேலியில் அவதரித்தவர்கள். பரம்பரைச் சைவவேளாளர். பாண்டிமழவர் குடியில் வந்தவர். தந்தையார் காராளபிள்ளை என்பவர். யாழ்ப்பாணத்து நல்லூர் ஸ்ரீ ஆறுமுகநாவலரவர்களின் முன்னோரில் ஒருவர் இவர் என்பர். திருப்புகலூர் அண்ணுசாமி சிவாசாரியாரிடம் சிவதீட்சை பெற்றவர் தேவியை உபாசித்து மந்திரசித்தி பெற்றவர். வங்காள தேசத்தை யடைந்து ஒருபிராமண சந்நியாசியிடத்து வடமொழி நூல்களைக்கற்று வல்லவராஞர். பின்பு, திருவண்ணுமலை யாதீனத்தை யடைந்து சைவசந்நியாசமும் சிவஞானேபதேசமும் பெற்றுச் சிவாகமங்களை ஓதியுணர்ந்தார். பௌஷ்கர ஆகம விருத்த சித்தாந்த சிகாமணி, பிரமாணதீபிகை, பிராசாததீபிகை, அஞ்ஞான விவேசனம், சிவயோகசாரம், சிவயோகரத்னம், சிவாகமாதி மான்மியசங்கிரகம், ஓமாத்திரிகற்பம் முதலியவற்றை வடமொழியில் இயற்றியருளினர். இச்சிவஞான சித்தியார் சுபக்கத்துக்கு ஓர் உரை தமிழிலே இயற்றினர்.

இவ்வுரை மறைஞானசம்பந்தர், சிவாக்கிரயோகிகள் உரைகளுக்குப் பிந்தியது. இவர் இவ்வுரையில் 'திருமறைஞானதேசிகர், ஸ்ரீ சிவக்கொழுந்தாசாரியர் என்னும் இவர்கள் சிவஞானசித்திக்குச் செய்தவுரைகள் விரிந்தபடியினுலே எழுவாய் பயனிலை பொருட்புணர்ச்சி பொள்ளெனத்தோன்ருவாயினும் தீவிர தீவிரதர புத்திமான்கள்

தங்கள் தங்கள் சம்பிரதாயத்துக்கு மாறிச் சில விரோதித் தன் மாத்திரம் நீக்கி நீர்நீக்கிப் பால்கொளும் அன்னம் போலப் பொருள்கொள்வார்கள் ஆதலானும், மற்றையோர் உரைத்த வுரைகள் தூரம்போய்ச் சுட்கதர்க்கமாய் முடியுமாதலானும் மந்தமதிகட்கு மயக்கம் போக்கும் பொருட்டுச் சுருக்கமாக ஒருரை சொல்வாம்' என நூல் முன்னர்க்காப்பும் உரையும் வரைந்திருக்கின்றனர்.

இதனல், மறைஞானசம்பந்தர், சிவாக்கிரயோகிகள் உரைகளையன்றி இதற்கு வேறுரைகளும் அக்காலத்து உள்ளன என அறியக்கிடக்கின்றது.

இனி, ஞானப்பிரகாசமுனிவர் உரைத்தவுரை 'பொருந்தாவுரை' எனக்காட்டி இவ்வாதீனத்துத் திராவிடமாபாடிய கர்த்தராகிய ஸ்ரீ மாதவச்சிவஞானயோகிகள் **'சிவ சமவாதவுரை மறுப்பு' 'எடுத்து என்னும் சொல்லுக்கிட்ட வயிரக்குப்பாயம்' 'சிவசமவாத கண்டனம் என்னும் சிவ சமவாதவுரை மறுப்பு'** என்னும் நியாயகண்டனங்கள் செய்தருளினர், சிவசமவாதம் சுருதி உத்தி அநுபவ விரோதமாமாறும், சித்தாந்த சைவநூலான சிவஞான சித்திக்கு அவ்வுரை இணங்காதவாறும், பிறவும் இம்மறுப்பினுள் அவர்களால் நன்றுணர்த்தப்பட்டன. இன்னும், சித்தாந்த ரகசியங்கள் பல இயைபுபற்றி வெளிப்படையான் அதன்கண் எடுத்தோதப்பட்டனவும் உள.

இனி, ஸ்ரீ மாதவச் சிவஞான யோகிகள் சிவஞானபாடியத்துப் பொதுவதிகாரத்து இறுதி அதிகரணத்தில், சிவசமவாதம் இயைபுபற்றி எடுத்துத் தடைவிடைகளான் மிக விரித்து மறுத்துச் சித்தாந்த சைவம் நாட்டினர். சிவ சமவாதவுரை மறுப்பினுள் ஆண்டாண்டு விரிவஞ்சிக்

கூறுது விடுத்த நுண்பொருள்களெல்லாம் ஆண்டும் பிறாண்டும் தெளிவாக விளக்கியருளினார்கள். ஆண்டுக் காண்க. 'சிவசமவாதவுரை மறுப்பு முதலியன' சிவ ஞான சித்தியார் கற்போருக்கு மிகமிக இன்றியமையா தன ஆகலின் அந்த நூல்களும் அச்சிட்டு விரைவில் வெளிவரச் சித்தமாயுள்ளன.

இனி, நிரம்பவழகிய தேசிகர் செய்தருளிய வுரை மற்றொன்று, அது சிவாக்கிரயோகிகளது கருத்துக்குச் சிலசில இடங்களில் மாறுபடும், நிரம்பவழகிய தேசிகர் வேதா ரணியத்திலே பரம்பரைச் சைவவேளாளர்குலத்திலே அபிஷிக்தர் மரபிலே தோன்றியவர்கள். வடமொழி தமிழ்மொழிகளில் மிக வல்லவர், கமலைஞானப்பிரகாச ருடைய மாணவருள் ஒருவர். சித்தாந்த சாத்திரப்பயிற்சி மிக்குடையவர், சிவஞானசித்தியாருக்கேயன்றித் திரு வருட்பயனுக்கும் உரை வரைந்துள்ளனர். சேதுபுராண மும் திருப்பரங்கிரிப்புராணமும் செய்தனர். திருப்பரங்கிரி யிலும், மதுரையிலும் நெடுநாள் வசித்துவந்தனர் என்ப. பரஞ்சோதிமுனிவரோடு உடன்பயின்றவர் எனவும் கூறு வதுண்டு. இவர்கள் காலம் பதினாறும் நூற்றாண்டின் பிற்பகுதி என்பர்.

இனி, "பாதிவிருத்தத்தால் இப்பார் விருத்தமாக உண்மை சாதித்தார்" எனத் தாயுமானசுவாமிகள் அருளிச் செய்த 'பாதிவிருத்தம்' யாது? என ஆராய்தல் இன்றி யமையாததொன்றன்றே! சிவபோகசாரத்திலே "ஆறாறு தத்துவமும் ஆணவமும் வல்வினையும், நீறாக முத்திநிலை நிற்போர்க்குப்– பேறாகப், பார்விரித்த நூலெல்லாம் பார்த் தறியின் சித்தியிலே, ஓர் விருத்தப் பாதிபோ தும்" என

ஸ்ரீ குருஞானசம்பந்ததேசிகமூர்த்திகளுமன்றோ !! அருளிச்செய்தனர். மேற்கூறிய இரு குரவரும் இரண்டு ஆதீன கர்த்தரன்றோ ! தாயுமானவர் ஆதீனம் திட்டைப் புகைவண்டி நிலயத்தின் கீழ்பால் அன்னப்பன்பேட்டையில் உள்ளது. மற்றொன்று உலகமறியப்பட்டதொன்றாகிய தருமையாதீனமாம். இரண்டு ஆசிரியர்களால் குறிக்கப்படும் பாதிவிருத்தம் "அறியாமை அறிவகற்றி அறிவினுள்ளே அறிவுதனை அருளினால் அறியாதே அறிந்து, குறியாதே குறித்தந்தக் கரணங்களோடும் கூடாதே வாடாதே குழைந்திருப்பை யாயின்" (சித்தி - சூத் - 8, அதி - 2, செய் - 30) என்பது. இதிற் கூறிய அகற்றலும் அறிதலும் அருளினாலன்றிக் கூடாது. அருளே வடிவமாக எழுந்தருளிய ஞானாசாரியனது திருவருள்தான் அவ்வருள். அறியாமை என்பது கேவலம். அறிவென்பது சகலம். கருவிகரணங்களோடு கூடாமல் ஆணவத்தில் ஆன்மா அழுந்திநிற்பது கேவலம். கேவலம் - தனி; ஈண்டுக் கருவி கரணங்களோடு கூடாமை. "**கேவலாவத்தையாவது**— தேகாதிகள் ஒன்றுமற்று, குணமற்று, தொழிலற்று, போகமற்று, கர்த்தாவாகையற்று, மைக்குள் மணிபோல ஆணவமலத்தினாலே மூடப்பட்டு ஓர் அறிவுமற்று வியாபியாய் இருக்கும் அவதரம். **சகலாவத்தையாவது**— பஞ்சகோசபெத்தனாய் அதனாலே பரிச்சின்னன் ஆகி, கிஞ்சிக்ஞனாய், அநாதிகன்மத்துக்கு ஈடாய், அநேக யோனிகளிலும் சஞ்சரித்து விடயங்களைப் புசிக்கும் அவதரம்" என்பது ஞானாமிர்தக் கட்டளை. "கேவலமாவது மலமளைய நின்ற அவதரம். சகலமாவது எல்லாக் கருவிகளோடும் கூடி நின்று வினைப்பயனை அநுபவிக்கும் அவதரம்" என்பது சுத்த சிவப்பிரகாசக்கட்டளை. கேவலமும் சகலமும் இருவகைப்பாசங்கள். பாசங்களின் நீங்குதற்குக்

குருவருள் வேண்டும். 'அறிவினுள்ளே அறிவுதனை அறியாதே அறிதற்கும்' குருவருள் வேண்டும். இது சுத்தாவத்தை. **சுத்தாவத்தையாவது** – இருவினையொப்பும் மலபரிபாகமும் சத்திநிபாதமும் வந்த காலத்துச் சரியை கிரியா யோக ஞான பாதங்களையுணர்ந்த குருகடாட்சத்தினலே மும்மலங்களையும் நீங்கிச் சச்சிதானந்த சிவமாக விளங்கும் அவதரம் "என்பது ஞானமிர்தக் கட்டளை. அறிதல் - கேட்டல், குறித்தல் - சிந்தித்தல், கேட்டல் சிந்தித்தல்களின் பயன் தெளிதல், அதனையே இங்கே 'அறியாதே அறிந்து குறியாதே குறித்து' என்றது. கேட்கும் முறைமையிற் கேட்டலும், சிந்திக்கும் முறைமையிற் சிந்தித்தலும் வேண்டும். பின்பு அன்புசெய்து அடங்கிநிற்கப் பெறுதல் அவசியம். குழைதல் – அன்பு செய்தல். கேட்டல் கூடும், சிந்தித்தல் கூடும், தெளிந்து அன்பு செய்தலும் கூடும். ஆனல், அடங்கி நிற்கப் பெறுதல் அருமையேயாம். அஃது எளிதன்று. இதனையே நமது தாயுமானசுவாமிகள் "ஐந்துவகையாகின்ற பூதமுதல் நாதமும் அடங்க வெளியாக வெளிசெய்து, அறியாமை அறிவாதி பிரிவாக அறிவார்கள்; அறிவாக நின்ற நிலையில் 'சிந்தையறநில்' என்று 'சும்மா இருத்தி' என அருளிச்செய்தார்கள். சிந்தையற நிற்றலும், சும்மா இருத்தலும் அம்மம்ம! அவ்வளவு எளிதா? 'சிந்தையையடக்கியே சும்மா விருக்கின்ற திறம் அரிது' எனப் பிறிதோரிடத்துக் கூறினமையும் காண்க. முதல்வன் நிராதாரமாய்த் தோன்றவேண்டி அறியாமையும் அறிதலுமாகிய இருவகைப் பாசங்களும் நீங்கித் தம் அறிவின் கண்ணே கேட்டல் அறிவினைக் கேட்கும் முறையிற் கேட்கச் செய்தவர் ஆசிரியர் அன்றே! அந்தஞானசாரியருடைய திருவருளையின்றி இவை யாவும் அமையா: ஆகலின், 'அருளினல்' என இடைநிலைத் தீவகமாக வைத்தருளியமையும் சிந்திக்கத்தக்கது.

இனி, 'அறியாமை யறிவகற்றி' என்னும் திருவிருத்தம் தாயுமானவர் பாடலில் அமைந்து கிடக்கும் முறை வருமாறு:— 1. 'அருளினால் அறியாமை அறிவு அகற்றி'– 'ஐந்து வகையாகின்ற......அறியாமை அறிவாதி பிரிவாக அறிவார்கள்; 2. அறிவினுள்ளே அறிவுதனை அறியாதே அறிந்து' – 'அறிவாகி நின்ற நிலையில்,; 3. 'குறியாதே குறித்தந்தக் கரணங்களோடும் கூடாதே' - 'சிந்தையற'; 4. 'வாடாதே' – 'நில்லென்று,; 5. குழைந்திருப்பையாயில்' – 'சும்மா இருத்தி'; 6. பிறியாத சிவன்தானே பிரிந்து தோன்றிப் பிரபஞ்ச பேதம் எல்லாம் தானாய்த் தோன்றி' – 'வெள்ளம் தேக்கித் திளைத்து'; 7. இவையெல்லாம் அல்லவாகி நெறியாலே நின்று என்றும் தோன்றிடுவன் நிராதாரனாயே'–'நானதுவாயிருக்க' எனப் பிரித்துச் சம்பந்த முண்மை காட்டியிருக்கின்றார்கள் இவ்வாதீனத்துச் சைவப்பிரசாரகர் ஸ்ரீ பொ. முத்தையபிள்ளையவர்கள்.

இத்திருவிருத்தக் கருத்து "அறிவறி யாமை யிரண்டுமகற்றிச், செறிவறி வாயெங்கும் நின்ற சிவனைப், பிறிவறியாது பிரானென்று பேணும், குறியறி யாதவர் கொள்ளறியாரே" எனத் திருமந்திரத்தில் அமைந்து நின்றமை காண்க.

இனி, "குறியைக் குறியாது குறித் தறியும், நெறியைத் தனிவேலை நிகழ்த் திடலும், செறிவற் றுலகோ டுரைசிந் தையுமற், றறிவற் றறியா மையுமற் றதுவே" எனவும், "அறிவொன் றறநின் றறிவா ரறிவிற், பிறிவொன் றறநின் றபிரா னலையோ" எனவும், "சும்மா விருசொல் லறவென் றலுமே, அம்மா பொருளொன் றுமறிந் திலனே" எனவும் ஸ்ரீ அருணகிரிநாதர் தமது கந்தரநுபூதியில் அருளிச் செய்

நீமையும் இதனை நன்குவிளக்குமென்க. இவ்வுபதேச மொழியைக் கருதியன்றே. "ஐயா! அருணகிரி யப்பா! உனைப்போல, மெய்யாக வோர்சொல் விளம்பினர்யார்?" எனத்தாயுமானவர் தம்பாடலில் அருளிச்செய்தனர். விரிக்கிற் பெருகும்.

இந்த நூலை ஆராய்ந்து பதிப்பிக்கும் காலத்து உடனிருந்து ஒப்புநோக்குதல் முதலிய உதவிகளைச்செய் தவர்கள் என்னிடத்துத்தமிழ்க்கல்வி பயின்று வருபவர்களா கிய திரு. இராமமூர்த்தி ஐயரும், சிரஞ்சிவி பஞ்சாபகேச நாடாரும் ஆவார். பிரதிகளை யெல்லாம் வைத்து, ஒப்பு நோக்கிச் செப்பஞ் செய்யும் காலத்தும், செய்யுள் முதற் குறிப்பகராதி, அரும்பத அகராதி, அரும்பதக்குறிப்பக ராதி, அருந்தொடரகராதி முதலியவைகளை உடனிருந்து குறிப்பின்வழி நடந்து செய்துமுடித்தவர் என் இளவலும் தமிழ்ப்புலமையும் சித்தாந்த சாத்திரவுணர்ச்சியுமுடைய வரும் ஆகிய சிரஞ்சிவி T. S. இராசகோபால பிள்ளை, வித்துவான், சிரஞ்சிவி V. நடராச பிள்ளை, M. திருநாவுக் கரசு முதலியோர். இவர்களுக் கெல்லாம் ஸ்ரீ-ல-ஸ்ரீ மகா சந்நிதானத்தின் கருணையும், ஸ்ரீ பஞ்சாக்கர பரமாசாரியர் திருவருளும் பெருக உண்டாவதாகுக எனச் சிந்தித்து வந்திக்கின்றேன். இனி,

"பின்னர்த் தொல்காப்பியப் பரிசோதனைக்காகத் தேடியபோது ஸ்ரீ-ல-ஸ்ரீ ஆறுமுகநாவலரவர்கள் பிரதி அகப்பட்டது. அதுகொண்டு கலித்தொகை அருமை யுணர்ந்து அதனை எப்படியும் உலகிற்குப் பயன்பட அச் சிடவேண்டுமென்னும் அவாவுற்று ஸ்ரீ ஆதீன மடாதிபதி களுக்கு விண்ணப்பஞ் செய்துகொண்டேன். காருண்ணி யமும் கலாபரிபாலனமுமே தமது திருமேனியாகக்

கொண்டு விளங்கும் திருவாவடுதுறைச் சற்குருநாத சுவாமிகள் உடனே தங்கள் மடத்துப் பிரதியுடன் வேறும் இரண்டு பிரதி தென் தேசத்தினின்று வருவித் தனுப்பி அச்சிட்டபிரதியும் 20 எடுத்துக்கொள்வதாக உத்தரவு செய்தது. இப்பேருபகாரத்திற்கு யானே அங்கு அடிமையாவதன்றி வேறுயாது கைம்மாறுளது?எனவும்,

சர்வஜித்து - ஆவணி - 1887. (கலித்தொகைப் பதிப்புரை - பக்கம் - 27)

"என் முயற்சிக்கு ஸ்ரீ கைலாசபரம்பரைத் திருவாவடுதுறையாதீனத்துச் சற்குருநாத சுவாமிகளாயிருந்து அடைந்துபோன ஸ்ரீ-ல-ஸ்ரீ சுப்பிரமணியதேசிக மூர்த்திகள் செய்துவந்ததுபோலவும், இப்பொழுது ஷை சுவாமிகள் பட்டத்திற்கு எழுந்தருளியிருக்கும் ஸ்ரீ-ல-ஸ்ரீ அம்பலவாணதேசிகமூர்த்திகள் செய்துவருவதுபோலவும், மற்றைத் தமிழ்நாட்டு ஆதீனங்களில் ஆங்காங்கு எழுந்தருளியிருக்கும் மகாசந்நிதானங்கள் கைகொடுத்து வருவார்களாயின் இன்னும் பல பண்டைக்காலத்துத் தமிழ் நூல் எடுத்துப் பரிசோதித்துப் பிரசரிப்பதில் அதிக ஊக்கம் உடையவனுவேன்." எனவும்

(தொண்டமான் புதுக்கோட்டை, விரோதி-ஐப்பசி. 1889. இலக்கணவிளக்கம் பதிப்புரை-பக்கம் - 19) யாழ்ப்பாணம் சி. வை. தாமோதரம் பிள்ளையவர்கள் எழுதியமை காண்க. இதனுல் தொடர்ச்சியாகவே தொன்றுதொட்டு இவ்வாதீனம் செய்துவரும் தமிழ்வளர்ச்சி, சமயவளர்ச்சிகளை எளிதில் அறியலாம்.

இனி, இவ்வாதீனத்துப் பதினறுவது குருமகாசந்நிதானம் ஸ்ரீ சுப்பிரமணியதேசிகமூர்த்திகள் காலம் 1868—1888. பதினேழாவது மகாசந்நிதானம் ஸ்ரீ அம்பலவாண

தேதிகமூர்த்திகள் காலம் 1888 — 1920. பதினேழாவது மகாசந்நிதானத்தின் கட்டளைப்படி கீழே கண்ட நூல்கள் ஆதீனப்பொருளுதவியினுல் வெளிவந்தன. அவை:

1. மெய்கண்டசாத்திரம் முழுவதும் உரையுடன் காஞ்சி - நாகலிங்க முதலியாரவர்கள் பதிப்பு. ஏவிளம்பி - துலா-மீ (கி. பி. 1897)

2. ஷை பதிப்பு சிவஞானசித்தியார் சுபக்கம் பதவுரை. ஏவிளம்பி – மேஷ-மீ (கி. பி. 1897)

3. திருவாவடுதுறைக் கோவை சுபகிருது – தை – (கி. பி. 1903) உ. வே. சா. பதிப்பு.

4. மண்ணிப்படிக்கரைப்புராணம் பிலவங்க – சித்திரை (கி. பி 1907) உ. வே. சா. பதிப்பு.

5. காஞ்சிப்புராணம் இரண்டு காண்டங்கள் காஞ்சி – நாகலிங்க முதலியார் பதிப்பு சாதாரண (கி. பி. 1910)

6. உபதேசகாண்டம் பொழிப்புரையுடன் ஈக்காடு- இரத்தினவேல் முதலியார் பரிதாபி – மகர ரவி (கி.பி.1913)

7. திருக்கோவையார் பதவுரை, திருக்கோவையார் உண்மை முதலியன. செந்தில்வேல் முதலியாரவர்கள்,

8. காசிகண்டம் பொழிப்புரையுடன் ஈக்காடு இரத்தினவேல் முதலியாரவர்கள் (1895)

9. ஸ்ரீ மாதவச்சிவஞானயோகிகள் பிரபந்தங்கள் மதுரை — இராமசாமி பிள்ளையவர்கள் நந்தன சிங்கமதி.

10. தேவாரம் தலமுறை மதுரை — இராமசாமி பிள்ளையவர்கள் விஷு – மார்கழி.

11. ஆதீனசைவப்பிரசாரகர்—தூத்துக்குடி-பொ. மு. சிவஞான சித்தியார் சுபக்கம் ஸ்ரீ மாதவச்சிவஞானயோகிகள் அருளிச்செய்த பொழிப்புரையைத்தழுவி யெழுதிய விரிவுப் பொழிப்புரை - முதற்பதிப்பு — 1914.

**இவ்வாதீனத்துப் பதினெட்டாவது மகாசந்நிதானம் ஸ்ரீ சுப்பிரமணியதேசிகமூர்த்திகள் காலம் — 1920—1922.**

ஐங்குறுநூறு பழையவுரை ரௌத்திரி — ஐப்பசி (கி-பி 1920) உ. வே. சா. 2-ஆம் பதிப்பு

சிலப்பதிகாரம் 2-ஆம் பதிப்பு ரௌத்திரி — ( 1920 ) உ-வே-சா.

இனி, 17-வது மகாசந்நிதானம் காலத்திலே யாழ்ப்பாணத்து வண்ணைநகர் ஸ்ரீ சுவாமிநாத பண்டிதரவர்கள் சாதாரண — (1911) ஆண்டில் தேவாரம் தலமுறையையும்; சிவஞான போதச் சிற்றுரை — மாபாடியக் குறிப்புக்களுடன் கூடிய சில பகுதிகளையும் (பராபவ — 1907) பதித்தார்கள் திருமுறையின் முகவுரை 5-ம் பக்கத்தில் பண்டிதரவர்கள் அடிக்குறிப்பில் எழுதுவதாவது " திருக்கைலாச பரம்பரைத் திருவாவடுதுறை ஆதீனத்து ஸ்ரீ-ல.ஸ்ரீ மகாசந்நிதானம் யான் திராவிடமாபாடியம் அச்சிட்டு வெளிப்படுத்திய ஞான்று ஐம்பது புத்தகங்கள் பெற்று அவற்றின் கிரயத்தை அளித்து இன்புறுத்திற்று" என்பது. பொ, முத்தைய பிள்ளையவர்கள் பதித்த பொழிப்புரை 200 பிரதிகள் ஆதீனத்தில் வாங்கப்பட்டன. 1926 - ஆண்டில் இரண்டாம் பதிப்புப் பிரதிகளும் 200 வாங்கப்பட்டன என்க.

**பத்தொன்பதாவது குருமகாசந்நிதானம் ஸ்ரீ வைத்தியலிங்கதேசிகசுவாமிகள் காலம் 1922—1937 வரையில்.**

பிள்ளையவர்கள் பிரபந்தத்திரட்டு அக்ஷய – 1926.

வண்டுவிடுதூது 2-ஆம்பதிப்பு - பிரமோதூத - 1931.

**20-வது குருமகாசந்நிதானம் ஸ்ரீஅம்பலவாணதேசிக மூர்த்திகள் காலம் 1937 — 1951** வண்டுவிடுதூது 3-ம் பதிப்பு. சர்வசித்து – 1947. உ-வே-சா.

மெய்கண்ட நூல்கள் உரைநடை ஸ்ரீ கா. சுப்பிரமணியபிள்ளை M. A., M. L,. அவர்கள் எழுதியது. காஞ்சிபுரம் திரு. கி. நாராயணசாமி முதலியார் (1938) பதித்தது. இப்பதிப்புக்குரிய பொருள் ஒருபகுதிதரப்பட்டது.

தூத்துக்குடி – ஸ்ரீ ந. சிவகுருநாத பிள்ளையவர்கள் எழுதிய சிவஞான சித்தியார் ஆராய்ச்சி (எண் - 30) இவ்வாதீனப் பொருளுதவி பெற்றுள்ளது (1949)

இந்த 20-வது குருமகாசந்நிதானத்தின் காலமுதலாக ஆதீனத்திலுள்ள நூல்களை ஆதீனவித்துவான்களைக் கொண்டு பரிசோதித்து அச்சிட்டு இலவசமாக வழங்கப்பட்டு வருவது உலகறிந்த செய்தி. இவ்வரலாறுகளைச் செவ்வேயறியாமையாற் பலர் இருபதாம் நூற்றாண்டின் செம்பாதிவரையில் திருவாவடுதுறை யாதீனம் தமிழ்ப்பணி, சைவசமயப்பணி செய்திலதென்பர். அவரறிந்தபடி அது, இவ்வாதீன வரலாறு, அம்பலவாணதேசிகர் நினைவு மலர், சைவப்பேரரசு முதலிய நூல் வெளியீட்டால் ஆதீனம் செய்துவரும் அருந்தொண்டுகள் நன்கு புலனும்.

இனி, காஞ்சி நாகலிங்கமுதலியாரவர்களைக்கொண்டு பதிப்பிக்கப்பெற்ற பிரதி இவ்வாதீனத்திலே பதினாறுவது குருமகாசந்நிதானத்தினிடத்தும், மகாவித்துவான் பிள்ளையவர்களிடத்தும் முறையே சித்தாந்த சாஸ்திரங்களையும்

இலக்கண இலக்கிய நூல்களையும் கற்றுச்சிறந்த மதுரை—இராமசாமி பிள்ளையவர்களால் செப்பஞ் செய்தனுப்பப் பெற்ற ஆதீனப்பிரதி என்பர் பதிப்பாளர்.

ஏட்டுப்பிரதிகளின் துணைகொண்டு பரிசோதித்த காலத்தில் அச்சிட்ட புத்தகங்களிலெல்லாம் அங்கங்கே சில சொற்களும் சொற்றொடர்களும் விடுபட்டுள்ளன. இப்பதிப்பில் அவை சேர்க்கப்பட்டுள. இப்பதிப்பையும் முன்புள்ளபதிப்புக்களையும்உடன்வைத்துஆராய்வார்க்கே அது புலனும். மற்றவர்க்கு அருமை புலப்படாது.

இப்புத்தகத்தைப் படிப்போருக்கு அநுகூலமாக இருக்கும்படி விஷய அட்டவணை முதலியன முன்னே கூட்டப்பட்டிருக்கின்றன.

**இந்நூலைப் பதிப்பித்தற்கு உதவியாயிருந்த பிரதிகள் வருமாறு :—**

1. திருவாவடுதுறை ஆதீனத்து (சரஸ்வதி மகால்) கல்விக்களஞ்சியத்தில் உள்ள உரையுடன் கூடிய பழைய ஏட்டுப்பிரதிகள் — 3.

2. இவ்வாதீனத்து அடியார் கூட்டத்தில் ஒருவரும், ஆதீனம் காறுபாரும் ஆகிய ஸ்ரீ சுந்தரலிங்கத்தம்பிரான் சுவாமிகள் (கி. பி. 1892) கையெழுத்துக் காகிதப்பிரதி - 1

3. யாழ்ப்பாணத்து நல்லூர் ஸ்ரீ த. கைலாசபிள்ளையவர்களால் (1883) சுபானு – ஆனியில் பதிப்பிக்கப்பட்ட சிவஞானசித்தியார் சுபக்கம் பொழிப்புரைமட்டும் உள்ள அச்சுப்பிரதி.

4. இவ்வாதீனத்துப் பதினேழாவது குருமஹாசந்நிதானம் ஸ்ரீ அம்பலவாண தேசிக மூர்த்திகள் கட்டளை

பிட்டருளியபடி காஞ்சி - ஸ்ரீ நாகலிங்கமுதலியாரவர்களால் (கி-பி. 1897) ஏவிளம்பி - துலாமீ பதிப்பிக்கப்பட்ட மெய்கண்டசாத்திரம் முழுவதும் உள்ள உரைப் புத்தகம். இதில் பதவுரை மட்டும் உள்ளது.

5. ஸ்ரீ தாமோதரம்பிள்ளையவர்களால் (1917) அச்சிடப்பட்ட பதவுரை மட்டும் உள்ள அச்சுப்புத்தகம்.

6. திருநெல்வேலித் தென்னிந்திய சைவ சித்தாந்த நூற்பதிப்புக் கழகத்தாரால் துந்துபி - தை (1923)ல் பதிப்பிக்கப் பெற்ற சிவஞான சித்தியார் சுபக்கம் இருவருரைப் புத்தகம்.

7. இவ்வாதீனத்துச் சைவப் பிரசாரகர் தூத்துக்குடி ஸ்ரீ பொ. முத்தையபிள்ளையவர்களால் பதிப்பிக்கப்பெற்ற (1914, 1926) சுபக்கம் நூதனப் பொழிப்புரைப் புத்தகம்.

8. சென்னை பச்சையப்ப முதலியார் கல்விச்சாலைத் தமிழ் உபாத்தியாயர் ஸ்ரீ ஆ. சிங்காரவேலு முதலியாரவர்களால் பார்வையிடப் பெற்றுப் (1899) பதிப்பித்த சைவ சித்தாந்த சாத்திரம் பதினான்கின் மூலம் மட்டுமுள்ள புத்தகம்.

9. தருமபுரம் ஆதீனப்பதிப்பு மெய்கண்டசாத்திரம் முழுவதும் மூலம் மட்டுமுள்ள (1942) புத்தகம் முதலியன.

இவைகளுள் ஏடெழுதுவோரால் நேர்ந்துள்ள எழுத்துப் பிழைகள் மலிந்திருப்பினும் ஏடுகளில் மூலமும் உரையும் திருத்தமாக உள்ளன. கையெழுத்துக் காகிதப் பிரதி மிகப்பழைய காகிதமாக ஒடிந்து போகும் நிலையில் உள்ளது. ஆயினும் திருத்தமாகப் பிழையின்றியிருந்தது.

இனி, ஸ்ரீ கைலாச பிள்ளையவர்கள் பதிப்பித்த பொழிப்புரைப்புத்தகத்தின் முகவுரை இறுதிப்பகுதியில் அவர்கள் குறித்திருப்பது வருமாறு :— "ஸ்ரீ நாவலரவர்களிடத்தே நான் பெற்றுக்கொண்ட பிரதி அவர்களால் ஒருதரம் பரிசோதிக்கப்பட்டமையால் அதனைக்கொண்டும், இணுவில், ஸ்ரீ நடராசையரவர்கள் தந்த இரண்டு பிரதிகளைக்கொண்டும் இந்நூல் அச்சிடப்பட்டது. ஸ்ரீ நடராசையரவர்கள் இரண்டு ஏட்டுப்பிரதிகள் தந்தமையேயன்றி எனக்கு இந்நூலின்கணிருந்த சந்தேகங்களையும் மாற்றினார்கள்..." என்பது

அன்றியும், அதற்கு மேற்பகுதியில் அவர்களே "வேதவாக்கியங்களை வலியுறுத்துவனவாய சரித்திரங்களைக் கூறும் புராணம் முதலியவைகளே சைவசமய நூல்கள் எனவும், அவைகளில் உள்ள வர்ணனைகளும் குறிப்பான் வேறு பொருள் உணருமாறு சொல்லப்பட்ட சரித்திரங்களுமே சைவத்துண்மைகள் எனவும் கொண்டு, சைவர்களுக்கு வேறு சமய நூல் யாதென மயங்குவார்க்கு, அம்மயக்கம் தீர்தற்பொருட்டும், சைவநூலுணர்ச்சி நன்குதித்தற் பொருட்டும் இந்நூலை அச்சிடத்தொடங்கினேன்" என எழுதியுள்ளமை காண்க.

ஸ்ரீ நாவலரவர்கள் சௌமிய (1849) ஆண்டிலே சென்னையிலிருந்து தட்சிணதேச யாத்திரை செய்து கொண்டு வந்தார்கள். அப்போது ஸ்ரீ மெய்கண்டசந்தானத்துப் பிரதம பரமாசாரியராகிய ஸ்ரீ நமச்சிவாயமூர்த்திகளைத்தரிசித்து உபயகுருமகாசந்நிதானங்களையும் தரிசித்தார்கள். அவர்களுடைய பிரசங்கவன்மையைக்குறித்து மகிழ்ந்து வியந்து, 'நாவலர்' என்னும் பட்டத்தைச் சூட்டி, அவர்களை மகாசந்நிதானம் கௌரவித்தது.

(நாவலர் சரித்திரம் – 28–29) மற்றும், நன்னூல் விருத்தியுரை, இலக்கணக்கொத்து, தொல்காப்பியச் சூத்திர விருத்தி, தர்க்கசங்கிரகம் அன்னம்பட்டீயம் மொழி பெயர்ப்பு, சிவஞானசித்தியார் பொழிப்புரை, சிவஞான போதச் சிற்றுரை முதலியவைகளை அருளிப் பதிப்பிக்கச் செய்தருளியது. அவைகளைப் பெற்று மகிழ்ந்த நாவல ரவர்கள் (1851) விரோதிகிருது ஐப்பசி மாதத்திலே நன் னூல் விருத்தியுரையை அச்சிட்டு வெளிப்படுத்தினார்கள். பின்பு மற்றைய நூல்களையும் காளடைவில் அச்சிட்டார் கள். எனினும், ஸ்ரீ மாதவச்சிவஞானயோகிகள் அருளிய சிவஞானபோதச் சிற்றுரை, சிவஞானசித்தி முதலியவை கள் ஸ்ரீ நாவலரவர்களால் பதிப்பிக்கப்படவில்லை. அவை களில், ஸ்ரீ த. கைலாசம் பிள்ளையவர்களால் ( 1883 ) சிவஞானசித்தியார் பொழிப்புரையும், ஸ்ரீசதாசிவப்பிள்ளை அவர்களால் (1885) சிவஞானபோதச் சிற்றுரையும் அச்சிடப்பட்டன.

மெய்கண்ட சாத்திரங்களையெல்லாம் தமது ஆதீனத் துப் பூர்வாசாரியர்கள் செய்த உரைகளுடன் நன்கு ஆராய்ந்து பதிப்பிக்குமாறு பெருங்கருணையுடன் கட்டளை யிட்டருளி அவ்வப்போது ஆவனவெல்லாம் அநுக்கிர கித்து ஸ்ரீ **மெய்கண்டசாத்திரப்** பிரதிஷ்டாசாரியராய், தமிழ்ப்புலவராயினருக்கெல்லாம் அன்னையனையராய், சித் தாந்தமாநாடு – திருமந்திரமாநாடு முதலியவைகளை அடிக் கடி கூட்டியருளிச் சைவப் பெருமக்கட்கெல்லாம் தனிப் பெரு விருந்தாகச் சித்தாந்தத் தேனமுதுமூட்டி இவ்வாதீ னத்தில் இப்பொழுது இருபத்தொன்றுவது குருமஹா சந்நிதானமாய், குரவர்மாமணியாய் வீற்றிருந்து சிவஞானச்

செங்கோல் செலுத்தும் ஸ்ரீ-ல-ஸ்ரீ சுப்பிரமணியதேசிக சுவாமிகள் பெருங்கொடைத்திறத்தையும், கருணைத்திறத் தையும் என்னென்று புகழ்வேம்! மகாசந்நிதானத்தின் திருவடித்தாமரைகளைச் சிந்தித்திருத்த லொன்றே எளி யேன் செய்யத்தக்கதாம். அறிஞர் குற்றம் பொறுத் தருள்க.

இங்ஙனம்,

*திருவாவடுதுறை*
1—10—54.

**சித்தாந்தசைவமணி—**
**த. ச. மீனாட்சிசுந்தரம் பிள்ளை,**
***ஆதீன வித்துவான்.***



திருவாவடுதுறையாதீனத்துப் பதினொருவது குருமஹாசந்நிதானம்

**மேலகரம்** —

ஸ்ரீ சுப்பிரமணியதேசிக மூர்த்திகள்

## நூலாசிரியர்

# ஸ்ரீ அருணந்திசிவாசாரியர்

### சரித்திரச் சுருக்கம்

———o———

செந்தமிழ் நாட்டின் ஒரு பகுதியாகச் சிறந்து விளங்கும் புண்ணிய பூமியாகிய நடுநாட்டிலே திருத்துறையூர் என்னும் சிவதலம் பெண்ணையாற்றின் வடகரையில் உள்ளது. அத்தலம் ஸ்ரீ சுந்தரமூர்த்தி சுவாமிகள் திருப்பதிகம் பெற்றது. பதிகம் பதினொரு திருப்பாட்டுகளையுடையது. பண் — தக்கராகம். 'துறையூர்த் தலைவா! உனை வேண்டிக் கொள்வேன் தவநெறியே' எனத் திருப்பாட்டுக்கள்தோறும் இறுதியடி அமைந்துள்ளது. அத்தலத்திலே ஏறக்குறைய எழுநூற்றைம்பது ஆண்டுகளின் முன்னர் ஆதிசைவர்மரபிலே சித்தாந்த சைவம் தழைத்தோங்குமாறு ஒரு சற்புத்திரர் திருவவதாரம் செய்தருளினர். முப்போதுந்திருமேனி தீண்டும் பெருவாழ்வும், புத்திர பரம்பரையாக ஆசிரியத்தன்மையெய்தும் பெருஞ்சிறப்பும் வாய்ந்த அவர் உரிய பருவத்திற்றானே உபநயன முதலியனவும் சமய விசேட நிருவாண தீக்ஷைகளும் ஆசிரியாபிடேகமும் செய்யப்பெற்றார். கிரியாவதியில் சிறிதும் பிறழாமல் ஆன்மார்த்த பரார்த்த பூஜைகளும் செய்து வந்தார். வேத சிவாகமங்களை முறையே ஓதியுணர்ந்தார். முழுமுதற்பரம்பொருளாகிய சிவபெருமானிடத்து இடையறாத பேரன்பு வாவரப் பெருகுவதாயிற்று. சிவாகமப் பொருளைச் சிந்தித்துணர்ந்து அகத்தும் புறத்தும் தூயராய்ச் சிவவழிபாட்டைச் செவ்வே செய்துவருவாராயினர். தம்மையடுத்த பக்குவர்க்குச் சித்தாந்தஉபதேசமும் செய்துவந்தார்.

தேவாரத்திருமுறைகளிலே எல்லையில்லாத பத்தி சிரத்தை விசுவாசம் வைத்து நியமமாகத் திருமுறைப் பூசையும் பாராயணமும் நாடோறும் செய்வாராயினர். அதனால், இவருக்கு **சகலாகமபண்டிதர்** என்னும் சிறப்புப் பெயரும் நாளடைவில் உண்டாயிற்று.

இங்ஙனம் நிகழ்ந்துவருங்காலத்திலே அண்மையில் உள்ள **திருப்பெண்ணாகடம்** என்னும் சிவதலத்திலே பாரம்பரைச் சைவவேளாளர் குலத்திலே சிவபக்தி குருபக்தி அடியார் பக்திகளிலும், செல்வத்திலும், கல்வியறிவொழுக்கங்களிலும் மேம்பட்டு விளங்கிய **அச்சுதகளப்பாளர்** என்பவர் ஒருவர் இருந்தார். அவர் சகலாகமபண்டிதருடைய சீடர். அவருக்கு முன்னைப் புண்ணியத்தால் எல்லாச் செல்வமும் எளிதிலே கிடைத்திருந்தும் பிள்ளைப்பேறில்லாக் குறையொன்றே இருந்து வந்தது. அதனால் அவர் பெரிதும் வருந்தித் தமது குலகுருவாகிய சகலாகமபண்டிதரை யடுத்துத் தங்குறைதீர வழியொன்று அருளவேண்டுமெனப் பிரார்த்தித்தார். ஆசிரியரும் தமது சீடர் குறையைத் தீர்க்கத்தக்க உபாயத்தைச் சிந்தித்திருந்தார். ஒருநாள் வழக்கம்போலத் தமது ஆன்மார்த்த பூசையையும் திருமுறைப்பூசையையும் செய்து முடித்தார். திருவருளைச் சிந்தித்துத் திருமுறையிலே கயிறு சாத்திப்பார்த்தார். அப்பொழுது திருஞானசம்பந்தமூர்த்தி நாயனார் அருளிச் செய்த திருவெண்காட்டுத் திருப்பதிகத்திலே இரண்டாவது திருப்பாட்டு உதயமாயிற்று. அப்பாடல் வருமாறு:—

"பேயடையா பிரிவெய்தும் பிள்ளையினோ டுள்ளநினை
வாயினவே வரம்பெறுவ ரையுறவேண் டாவொன்றும்
வேயனதோ ளுமைபங்கன் வெண்காட்டு முக்குளநீர்
தோய்வினையா ரவர்தம்மைத் தோயாவாந் தீவினையே".

என்பது அது. சகலாகமபண்டிதர் அத்திருப்பாட்டின் பொருளைச் சிந்தித்து மகிழ்ந்தார். சீடரை நோக்கி, 'ஐய! உம்முடைய எண்ணம் நிறைவேறும், திருவெண்காட்டை அடைந்து அங்கேயுள்ள முக்குளநீரில் விதிப்படி முழுகிப் பிரமவித்தியாநாயகியாரையும் சுவேதவனப் பெருமானையும் பேரன்புடன் வழிபட்டுவருக'என அச்சுதகளப்பாளருக்கு விடைகொடுத்தருளினர்.

அச்சுதகளப்பாளரும் ஆசிரியர் கட்டளையைச் சிரமேற் கொண்டு தமது மனைவியாரையும் உடனழைத்துத் திருவெண் காட்டை யடைந்தார். முக்குளதீர்த்தத்திலே முழுகினார். சிவபிரானையும் உமாதேவியாரையும் விதிப்படி வழிபட்டு வரு வாராயினர். சிவபெருமானுக்கு நித்திய நைமித்திகங்களைச் சிறப்பாகச் செய்வித்தார். மகேசுரபூசையையும் விதிப்படி நாடோறும் செய்துவந்தார். ஒருநாள் சிவபெருமான் அச்சுத களப்பாளர் கனவிலே தோன்றி, அன்பனே! உனக்கு இப் பிறவியில் பிள்ளைப்பேறு அரிது. ஆயினும், தேவாரத் திரு முறையிலே சிறந்த பத்திவைத்து, அதனைப்பிரமாணமாகக் கொண்டு ஒழுகிவருவதால், திருஞானசம்பந்தப் பிள்ளையைப் போன்று சைவசமயத்தை நிலைநாட்டவல்ல ஒரு சற்புத்திரன் உன்னிடத்துத் தோன்றுவான். தோத்திரவடிவாயுள்ள தேவாரத் திருமுறையின் மெய்ப்பொருளைச் சாத்திரவாயிலாக வெளியிட்டுச் சித்தாந்தசைவ சமயஸ்தாபனம் செய்து தமிழ் நாட்டார் உய்யுமாறு வழிகாட்டவல்லவனாவான், கவலற்க!' எனக்கூறி அபயந்தந்து மறைந்தருளினர்.

அச்சுதகளப்பாளர் சிவபெருமான் தமது கனவிலே தோன்றி அருளியமையைச் சிந்தித்து மகிழ்ந்தார். தமது மனைவியாருடன் தாமும் சிவபெருமானை வழக்கம் போலவே வழிபாடாற்றி வந்தார். சிலகாலம் சென்றது. மனைவியார்

வயிறுவாய்த்தார். திருவருளைப் பெரிதும் வியந்தார். சிவாகம விதிப்படி செய்யவேண்டிய சடங்குகளையெல்லாம் செவ்வே செய்துமுடித்தார். பத்துத்திங்களும்நிரம்பின. தமிழகம் செய்தமாதவம் நிறைவேறவும், சித்தாந்த சைவ சமயம் தழைத்தோங்கவும் நல்லோரையிலே ஒரு தவப்புதல்வர் திருவவதாரம் செய்தார். இக் குழந்தைக்குச் சாதகன்ம முதலியன விதிப்படி செய்தார்கள். சுவேதவனப் பெருமான் திருவருளால் தோன்றினமையின் **சுவேதவனப்பெருமாள்** எனப் பிள்ளைத்திருநாமம் இட்டழைத்தனர். அச்சுதகளப் பாளர் அருமையாக இப்பிள்ளையை வளர்த்து வந்தனர்.

இங்ஙனமாக, திருவெண்ணெய்நல்லூரிலிருந்து சுவேத வனப் பெருமாளது நன்மாமனுர் வந்து குழந்தையைக் கண்டு பெரிதும் மகிழ்ந்தார். சைவப்பெருவாழ்வைத்தாம் அழைத்துச்சென்று தம் ஊரிலே செல்வமாய் வளர்ப்பாராயினர். சுவேதவனப்பெருமாளும் நாளொருமேனியும் பொழுதொரு வண்ணமுமாக வளர்ந்துவந்தார். இளம்பருவ விளையாட்டினுல் யாவரையும் மகிழ்வூட்டினர். ஆயினும், மெய்யுணர்வின் முற்றுப்பேறுடையாராகலின்உலக நிலையை விரும்பாமலிருந்துவந்தார். இரண்டு ஆண்டுகள் சென்றன. சிறுபருவச் செயலெல்லாம் சிவபுண்ணியச் செயலாகவே மலிந்தன.

அந்நாளிலே, திருக்கயிலாயமலையிலே கல்லால மரநீழலிலே தென்முகப்பரமாசாரியராக வீற்றிருந்த சிவபெருமான்பால் எல்லா ஆகமப்பொருள்களையும் மலைவற விளக்கும் சிவஞான போதப்பொருளை உபதேசமுறையிற் பெற்ற திருநந்திதேவர் மரபிலே வந்த பாஞ்சோதி மாமுனிவர் திருவெண்ணெய் நல்லூரையடைந்து சாமுசித்தராக விளங்கும் சுவேதவனப் பெருமாளுக்குத் தீக்ஷை செய்து குருமரபில் தாம் சத்திய ஞான தரிசினிபால் கேட்டவாறே சிவஞான

போதத்தை உபதேசித்துத் தமிழகமுய்யத் தமிழிலே மொழி பெயர்த்து வார்த்திகப் பொழிப்பும் உரைக்குமாறு கட்டளை யிட்டருளினர். சித்தாந்தசைவமாகிய மெய்ச்சமய உண்மை உணர்ந்து அதனை நிலை நாட்டுதற்கும், பொய்ச்சமய இருளைக் கடிதற்கும், தமதுஆசிரியர் திருப்பெயருக்கிணங்கக் காரணப் பெயராக **மெய்கண்டதேவர்** எனத் தீக்ஷாநாமமும் சாத்தி வழிச்சென்றனர். மெய்கண்டதேவர் தமதாசிரியர் பால் கேட்ட சிவஞான போதப் பொருளைத் திருவெண்ணெய் நல்லூரிலே திருவருட்டுறையிலுள்ள பொல்லாப்பிள்ளையார் சந்நிதியிலே இருந்து சிந்தித்துத் தெளிந்து நிட்டைகூடினர். ஆசிரியர் ஆணைப்படி தாம் பெற்ற வடமொழிச்சிவஞான போதத்தைத் தமிழிலே மொழிபெயர்த்து வார்த்திகப் பொழிப்புமருளிச்செய்தனர். தம்மையடைந்த உத்தமோத் தம பக்குவமுடையாருக்கு உண்மைப்பொருளையுபதேசித்துச் சித்தாந்தசைவஸ்தாபனம் செய்து கொண்டு வீற்றிருந்தனர்.

இச் செய்திகளை யெல்லாம் குலகுருவாகிய சகலாகம பண்டிதர் கேட்டு மகிழ்ந்திருந்தனர். மெய்கண்ட தேவரை நேரிற்காணுமாறு அவர் திருவெண்ணெய் நல்லூருக்கு வந்து சேர்ந்தனர். அப்பொழுது மெய்கண்டதேவர் தமது மாண வர்கட்குப் பதி பசு பாசமாகிய முப்பொருளுண்மையை உப தேசித்துக் கொண்டிருந்தார். அதனைச் செவிமடுத்த சகலாகம பண்டிதர் இருவினை யொப்பு மலபரிபாகம் சத்தி நிபாத முற்றவராகலின் அடியற்றமரம் போல் மெய்கண்ட தேவர் திருவடிகளில் வீழ்ந்து வணங்கித் தம்மையாட் கொண்டருளுமாறு பிரார்த்தித்தார். மெய்கண்டதேவரும் அவருடைய சத்திநிபாத நிலையைப்பார்த்துத் திருவடிதீக்ஷை செய்து, தாமருளிய சிவஞானபோதத்தை யுபதேசித்து, அருணந்தி எனத் தீக்ஷாநாமம் சூட்டி அநுக்கிரகம் செய் தனர். 'இச்சிவஞானபோத நூற்பொருளை விரித்துப் பிற

காலத்தார்க்கு இனிது விளங்குமாறு ஓர் நூல் செய்க' எனக் கட்டளையிட்டருளினர். அவ்வாணையைச் சிரமேற்கொண்டு சிவஞான சித்தியார் என்னும் இவ்வரிய நூலைச் செய் தருளினர். அருணந்திசிவாசாரியர் அருளிச்செய்த இந்நூல் சிவாகமங்களுக் கெல்லாம் உரையாணி போன்ற தெனப் பெரியோர் கூறுவர். சிவஞான சித்தியார் பரபக்கம் சுபக்கம் என இரண்டு பெரும் பிரிவினை யுடையது. இந்நூலையன்றி இவ்வாசிரியர் இருபாஇருபஃது என்னும் சிறந்த நூலையும் அருளினர். பின்பு, அருணந்திசிவாசாரியர் தமதாசிரியர்பால் கேட்டவாறே சிவஞானபோதத்தையும், தாம் அருளிய இருநூல்களையும் திருப்பெண்ணாகடத்தில் அவதரித்த ஸ்ரீ மறைஞான சம்பந்தருக்கு உபதேசித்தருளினர். இடையறாத சிவானந்த நிட்டையிலெழுந்தருளியிருந்த அருணந்தி தேவ நாயனார் புரட்டாசிப் பூரநாளில் திருத்துறையூரிலே சிவபரிபூரணமாயினர்.

---

திருச்சிற்றம்பலம்.

# உரையாசிரியர்

## ஸ்ரீ மாதவச்சிவஞானயோகிகள் வரலாறு

---

பாண்டிநாட்டிலே பொதியில் மலைச்சாரலிலே பாவ நாசம் என்னும் தலம் உள்ளது. அதனருகே விக்கிரம சிங்கபுரம் என்னும் சிற்றூர் உண்டு. அவ்வூரில் ஆனந்தக் கூத்தர் என்னும் ஒருவர் இருந்தார். அவர் பரம்பரைச் சைவவேளாளர். சிவபத்தி குருபத்தி அடியார் பத்திகளிற் சிறந்தவர். அவர் மனைவியார் மயிலம்மையார் என்பார் அருந்ததியன்ன பெருந்துதிக்குரிய கற்புடையவர். அக் குடும்பத்தினர் தமிழ் முனிவராகிய அகத்திய முனிவர் பால் தவங்கிடந்து ஏழுதலைமுறையளவும் அருட்புலமை நிரம்பிய புத்திரப்பேறுண்டாக வரம் பெற்றனர். ஏழாவது தலைமுறையிலே தமிழ்நாடு செய்ததவப்பயனாக ஆனந்தக் கூத்தருக்கு மயிலம்மையார் வயிற்றில் ஒரு சற்புத்திரர் திருவவதாரம் செய்தார். பெற்றோர்கள் அப்புதல்வருக்கு முக்களாலிங்கர் என்னும் பிள்ளைத்திருநாமம் இட்டு வளர்த்து வந்தனர். முக்களாலிங்கர் சிறுபிராயத்திலேயே ஒழுக்கம், அன்பு, அருள், ஆசாரம், தவம் முதலியன வளர வளர்ந்து வருவாராயினர்.

முக்களாலிங்கர் சிறுபிராயமாயிருக்கும்போது பள்ளியிற் சென்று படித்துவிட்டு ஒரு நாள் வழக்கம்போலத் திரும்பிப் பகற் போசனம் செய்ய வீட்டுக்கு வந்தார். அப்போது வழியிலே திருவாவடுதுறை ஆதீனத்து முனிவர்கள் சிலர் முக்களாலிங்கரைச்சந்தித்தனர். முக்களாலிங்கர் முனிவர்களை வணங்கித் தமது வீட்டிற்கு எழுந்தருளித் திருவமுது செய்தருள வேண்டுமெனக் குறையிரந்து வேண்டி நின்றார். முனிவர்கள் அவர் பேரன்புக்கு

இசைந்து அவருடன் வீட்டுக்குச் சென்றனர். அச்சமயத்திலே அவர் தந்தையார் வீட்டில் இல்லை. ஆயினும், மயிலம்மையார் அம்முனிவர்களை உபசரித்துத் திருவமுது செய்வித்தார். அதனைக்கண்ட முக்களாலிங்கர் தமது தாயைப் பெரிதும் பாராட்டினர்.

**'அருந்ததியென் னம்மை அடியவர்கட் கென்றும்**
**திருந்த அமுதளிக்கும் செல்வி — பொருந்தவே**
**ஆனந்தக் கூத்தர் அகமகிழத் தொண்டுசெயும்**
**மானந் தவாத மயில்'**

என்னும் ஒருவெண்பாவைப்பாடி மகிழ்ந்தார். ஆனந்தக் கூத்தர் தமது வேலைகளை முடித்துவிட்டு வீட்டுக்கு வந்து சேர்ந்தார். நிகழ்ந்தவற்றை அறிந்தார். மிகவும் மகிழ்ச்சி கொண்டார்.

பின்பு, அம்முனிவர்களை ஆனந்தக் கூத்தர் வணங்கி நின்றார். முக்களாலிங்கர் தாமும் அம்முனிவர்களோடு செல்ல வேண்டுமெனத் தந்தையார் பால் தெரிவித்தார். தந்தையாருக்கு மைந்தரைவிட்டுப் பிரிய மனம் வரவில்லை. திருவருளால் சிறிதுமனம் தேறினார். ஒருவாறு இசைந்து முனிவர்கள்பால் ஒப்படைத்தார். ஆதீனத்து முனிவர்களுடனே முக்களாலிங்கர் சிவதல யாத்திரை செய்து வழியிலுள்ள சிவாலயங்களையெல்லாம் வணங்கித் தரிசனம் செய்துகொண்டு திருவாவடுதுறை ஆதீனத்தையடைந்தார். 'மூர்த்திதலம் தீர்த்தம் முறையாய்த் தொடங்கினர்க்கோர்—வார்த்தை சொல்ல சற்குருவும் வாய்க்கும் பராபரமே' என்ற பெரியோர் வாக்கிற்கிணங்க ஆதீன மடாலயத்தையடைந்து ஆதீன முதற்குரவராகிய ஸ்ரீ நமச்சிவாயமூர்த்திகளை விதிப்படி தரிசித்தார். பின்பு சின்னப் பட்டத்தில் வீற்றிருந்தருளிய பேரூர்—வேலப்ப

தேசிக சுவாமிகளைத் தரிசித்துப் பேரன்போடுவணங்கினார். முக்களாலிங்கருடைய இளமைப் பிராயத்தையும் முதிர்ந்த பக்குவ நிலையையும் ஆசிரியர் கண்டு வியந்தார். தீவிரதர சத்திநிபாதமுடைய முக்களாலிங்கருக்கு சைவசந்நியாசம் கொடுத்து ஞானதீட்சையும் செய்தருளினார். மெய்கண்ட நூல்களையும், பண்டார சாத்திரங்களையும் உபதேசித் தருளினர், 'சிவஞானயோகி' எனத்தீட்சாநாமமும் செய் தனர். மகத்துவமுடைய அகத்தியமுனிவர் வரத்தால் அவதரித்தவராகலின் வடமொழிக் கடலும் தென்தமிழ்க் கடலும் எளிதிலே நிலைகண்டுணர்ந்தார், சிவஞானியாக வீற்றிருந்தருளினர்.

சிவஞானயோகிகள் உலகோபகாரமாகச் சிவஞான போதத்திற்குத் திராவிடமாபாடியம் என்னும் பேருரை யும், இலகு வியாக்கினமாகிய சிற்றுரையும் செய்தருளினர். பின்பு, சிவஞான சித்தியாருக்கு உள்ள உரைகளில் பொருந்தாதவற்றைக்களையத் திருவுளங் கொண்டு ஒரு பொழிப்புரை வரைந்தருளினர், இப் பொழிப்புரை யொன்றுமே சிவஞான சித்திக்குள்ள உரைகளில் சிரத் தானமாய் விளங்குவது, சிவஞான சித்தியாருக்குத் திருவண்ணாமலை யாதீனத்துமுனிவர் கூட்டத்துள் ஒருவரா கிய ஞானப்பிரகாசருரை சித்தாந்தசைவ நூலுக்குப் பொருந்தாத சிவசமவாதவுரை ஆகலின் அதற்கோர் மறுப்பும் அருளினர். சிவசம வாதவுரை மறுப்பு, எடுத்து என்னும் சொல்லுக்கிட்ட வைரக்குப்பாயம், சிவசமவாத கண்டனம் என்னும் சிவசமவாதவுரை மறுப்பு முதலிய வற்றையும் செய்தருளினர். இவையல்லாமலும், 1. தொல்காப்பியச் சூத்திர விருத்தி, 2, சோமேசர் முது மொழி வெண்பா, 3. திருவேகம்பரந்தாதி, 4, வட திரு முல்லை வாயிலந்தாதி, 5. குளத்தூர்ப்பதிற்றுப்பத்தந்தாதி

6. கலைசைப்பதிற்றுப்பத்தந்தாதி, 7. செங்கழுநீர் விநாயகர் பிள்ளைத்தமிழ், 8 அமுதாம்பிகை பிள்ளைத்தமிழ், 9. கச்சி ஆனந்தருத்திரேசர் பதிகம், 10. செப்பறை அகிலாண்டேசுவரி பதிகம், 11. திருவேகம்பர் ஆனந்தக் களிப்பு, 12. திருத்தொண்டர் திருநாமக்கோவை, 13, பஞ் சாக்கர தேசிகர் மாலை, 14. தருக்கசங்கிரக அன்னம் பட்டீயங்களின் மொழிபெயர்ப்பு, 15. சித்தாந்தமரபு கண் டன கண்டனம். 16. ஹரதத்தாசாரியர் செய்தருளிய சுலோகபஞ்சகத்தின் மொழிபெயர்ப்பு, 17. அப்பயதீக்ஷி தர் செய்த சிவ தத்துவ விவேக மொழிபெயர்ப்பு, 18.காஞ் சிப் புராண முதற்காண்ட மொழிபெயர்ப்பு, 19. சித்தாந் தப் பிரகாசிகை மொழிபெயர்ப்பு, 20. கம்பராமாயண முதற்செய்யுட் சங்கோத்தரவிருத்தி, 21. இலக்கண விளக் கச் சூறாவளி, 22. நன்னூல் விருத்தியுரை முதலியவற்றை யும் அருளிச் செய்தார்கள்.

ஸ்ரீ சிவஞானயோகிகள் மாணவருட் சிறந்தார் கவி ராக்ஷஸ—கச்சியப்ப முனிவர், மதுரகவி–தொட்டிக்கலை– சுப்பிரமணியமுனிவர், இராமநாதபுரம் – சோமசுந்தரம் பிள்ளை, இலக்கணம்—சிதம்பர நாத முனிவர், காஞ்சீபுரம் சிதம்பர முனிவர் முதலியோர். இவர்கள் வரலாறு முழுவ தும் திருவாவடுதுறை ஆதீன வரலாறு, குருபரம்பரை விளக்கம் முதலியவற்றால் அறியலாம்.

தவமே யொருதிருவுருக் கொண்டு விளங்கிய ஸ்ரீ மாதவச்சிவஞான யோகிகள் தமது முப்பத்திரண்டாம் வயதில் சிவானந்த நிட்டையில் வீற்றிருந்து மெய்கண்டார் யாண்டு 562 விசுவாவசு - சித்திரை – ஆயிலிய நாளில் திருவாவடுதுறையிலே சிவபரிபூரணமடைந்தருளினர்.

மேலகரம்

# ஸ்ரீ சுப்பிரமணிய தேசிக சுவாமிகள்

## சரித்திரச் சுருக்கம்

---

பாண்டிவள நாட்டிலே திருக்குற்றாலத் திருத்தலத்துக்கு அருகிலேயுள்ள மேலகரம் என்னும் ஊரிலே பரம்பரைச் சைவவேளாளர் குலத்திலே ஒருசற்புத்திரர் அவதாரம் செய்தருளினர். அவர் குற்றாலலிங்கர் என்னும் பிள்ளைத் திருநாமமுடையவர். திருக்குற்றாலத் தலபுராண முதலிய பல நூல்களைச் செய்தருளிக் கீர்த்தி மிகப் படைத்த திரிகூடராசப்பக்கவிராயருக்கு நான்காம் தலைமுறையிலே தோன்றியவர் சுப்பிரமணியக் கவிராசர் என்பவர். அவருடைய இரண்டாம் புதல்வரே குற்றாலலிங்கர் ஆவார். அவர் சாலிவாகன சகம் 1755 விசய - தை - முதல்தேதி ஞாயிற்றுக்கிழமையும் அவிட்ட நாண்மீனும் மீன லக்கினமும் கூடிய சுபதினத்திலே தோன்றியவர். இளம்பருவத்திலே வித்தியாரம்பம் செய்வித்தனர். இவர் அக்கால வழக்கப்படி தமிழ் சம்ஸ்கிருதம் ஆகிய இருமொழியும் பயின்று வந்தார். பன்னிரண்டு வயதளவிலே திருவாவடுதுறை யாதீனத்துச் சின்னப் பண்டாரச் சந்நிதிகள் வீற்றிருக்கும் கல்லிடைக்குறிச்சித் தளிகை மடாலயத்திற்கு இவர் தந்தையார் இவரை அழைத்து வந்தார். அப்போது அங்கே வித்துவானாக இருந்த இலக்கணம்—அம்பலவாணத்தம்பிரானிடமும், வித்துவான் தாண்டவராயத்

தம்பிரானிடமும் தமிழ்க்கல்வி பயின்று வருமாறு குற்றால லிங்கரை ஒப்படை செய்தார். ஆதீன வடமொழி வித்துவான் வேதாந்த சாஸ்திரிகளிடமும் வடமொழிப் பயிற்சி செய்வித்தார். குற்றாலலிங்கர் சிறிது காலத்தில் தமிழ்ப் புலமையும் வடமொழிப் புலமையும் மிகப்பெற்றார். மாணவர் யாவரினும் மிகமேம்பட்டுவிளங்கினர்.

இங்ஙனமாக, அப்பொழுது மகாசந்நிதானமாக எழுந்தருளியிருந்த பதினைந்தாவது ஸ்ரீ அம்பலவாண தேசிகர் தக்ஷிண தேச யாத்திரையாக எழுந்தருளி வந்து திருநெல்வேலி ஈசானமடத்திலே வீற்றிருந்தார்கள், அப்போது குற்றாலலிங்கர் தமது தந்தையாருடன் சென்று தரிசித்து வணங்கிநின்றார். குற்றாலலிங்கருடைய கல்வியறிவொழுக்கங்களையும் தீவிர சத்திநிபாதத்தையும் கண்டு ஆதீன சம்பிரதாயப்படி ஞானவதி தீட்சை செய்து சைவ சந்நியாசமும் கொடுத்தருளினார். பின்னர் கல்லிடைக் குறிச்சிக்கெழுந்தருளியபொழுது அவரைச் சின்னப் பட்டமாக அபிஷேகம் செய்து சுப்பிரமணியதேசிகர் என்னும் தீக்ஷா நாமமும் சாத்தியருளினர், பின்பு, ஞானாசாரியருடனிருந்து ஆதீன சம்பிரதாய சாஸ்திரங்களை ஐயந்திரிபற ஓதியுணர்ந்தனர். முன்னே பேட்டையில் தோன்றி இளம்பருவத்திலே திருவாவடுதுறையை அடைந்து ஸ்ரீ அம்பலவாணதேசிகரிடத்தே சைவசந்நியாசமும் மூவகைத் தீட்சையும் பெற்று வடமொழி தமிழ்மொழிகளில் வல்லவராய்த் திகழ்ந்த நமச்சிவாயத்தம்பிரான் சுவாமிகளும் ஆதீனத்திலே சிறப்புடன்விளங்கினர்.

கி-பி. 1845-முதல் 1868-வரையில் பதினைந்தாவது குருமகா சந்நிதானம் ஸ்ரீ அம்பலவாணதேசிகருக்குப்பின் 1868—முதல் 1888—வரை பீடத்திலெழுந்தருளியிருந்தனர். நமசிவாயதேசிகர் சின்னப்பட்டத்தில் எழுந்தருளியிருந்த காலம் கி-பி. 1871 — 1883-வரையில். அதற்குமுன் நமசிவாயதேசிகர் தம்பிரானுகக் காசியில் 12-ஆண்டுகள் வசித்திருந்தனர். அந்தக்காலம் 1859 முதல் 1871 வரை என்பர்.

ஸ்ரீ சுப்பிரமணிய தேசிகர் சின்னப்பட்டத்திலிருந்த காலத்திலேயே மகாவித்துவான்-மீனுட்சிசுந்தரம் பிள்ளையவர்கள் ஆதீனவித்துவானுகவும், மகாவித்துவானுகவும் விளங்கினர். ஸ்ரீ சுப்பிரமணிய தேசிகருடைய மாணவர் மிகப்பலர். சாஸ்திரபாடங்களைத்தாமே பாடம் சொல்லுவார்கள். தமிழ் வித்துவான்கள், வடமொழிவித்துவான்களுடைய சல்லாபமே இவர்கள் சந்நிதியில் நிறைந்திருக்கும். சங்கீதத்திலும் மிகவல்லவர்கள். இவர்கள் வரலாறு மகாமகோபாத்தியாய ஸ்ரீமத் ஐயரவர்கள் எழுதியுள்ள பிள்ளையவர்கள் வரலாறுகள், என் சரித்திரம் முதலிய நூல்களால் அறியக்கிடப்பன. ஆண்டுக் காண்க. சிவஞான சித்தியாருக்குப் பொழிப்புரையைத் தழுவி இவர்கள் பதவுரை செய்தருளினர். அது மிகப்பயனுடையது.

# சிவஞானசித்தியார் பதவுரைச்

# சிறப்புப்பாயிரம்.

—o—

மஹாவித்துவான் – ஸ்ரீ மீனாட்சிசுந்தரம்பிள்ளையவர்கள்
*இயற்றியது.*

" ஒருபரைநேர் தரவுலகத் துயிர்பலவும் விருத்தியுற
ஓம்பி மீட்டும்
கருமலவே ரறுத்தருளித் தானேக்கும் பெருங்கருணைக்
கடவுள் ஞானப்
பெருவலிய னெமக்கெளியன் பேணுதார் தமக்கரியன்
பெருகா னந்தம்
தருதிருவா வடுதுறைச்சுப் பிரமணிய தேசிகன்பொற்
சரணம் சார்வாம். " (1)

" முற்றுணர்ந்த வருணந்தி சிவனருள்செய் சித்தியெனும்
முடிபா நன்னூற்
குற்றுணர்ந்த சிவஞான மாமுனிவ னுரைத்தபொழிப்
புரையிம் மண்மேற்
கற்றுணர்ந்த சிலர்க்கன்றிப் பலர்க்குமுப காரமுருக்
கருத்தா ழத்தைச்
சற்றுணர்ந்த வெம்மனோர் களுமிடர்தீர்ந் தெளிதுணரும்
தன்மை யோர்ந்து," (2)

"வளர்திருவா வடுதுறையம் பலவாண தேசிகன்கண்
மணியாய் நாளும்
தளர்வறவந் தருள்பொழிசுப் பிரமணிய வெங்கள்குரு
சாமி யென்பான்
விளர்தபுமப் பொழிப்புரையின் விரோதமுருப் பதவுரை
விளக்கந் தந்தான் [யாம்
கிளர்தருமற் றவர்க்கியாது புரிதுமென்றும் பணிதலன்றிக்
கிளக்குங் காலே," (3)

"நல்லானந் துறைசையிற்சுப் பிரமணிய குருசாமி
நவிறல் போன்முன்
இல்லாமை யானன்றே சமவாதப் படுகுழிவீழ்ந்
திழிந்தார் சில்லோர்
ஒல்லாத மாயாவா தக்கரிய சேறழுந்தி
உழன்றார் சில்லோர்
பொல்லாத வினுமுளபல் புகர்மதக்கோட் பாட்டழுந்திப்
போனார் சில்லோர்," (4)

"இனியாது மெண்ணாராய்த் திகழ்திருவா வடுதுறையை
எய்தி யாரும்
தனியானு மவனடியார்க் கடியாராய்ச் சித்தாந்த
சைவ ராகி
நனியாருஞ் சிவானந்தப் பெரும்பரவையிடைத்தோய்ந்து
நாளும் வாழ்வார்
பனியாம லிவரினைய ரேலவற்காட் படுமெஞ்சீர்
பகரொ ணாதே," (5)

"கயிலாய பரம்பரையிற் சிவஞான போதநெறி
காட்டும் வெண்ணெ
பயில்வாய்மை மெய்கண்டான் சந்ததிக்கோர் மெய்ஞ்ஞான
பாநு வாகிக்
குயிலாரும் பொழிற்றிருவா வடுதுறைவாழ் குருநமச்சி
வாய தேவன்
சயிலாதி மரபுடையோன் றிருமரபு நீடூழி
தழைக மாதோ."

# ஸ்ரீ மாதவச்சிவஞானயோகிகள்

## உரையில் எடுத்தாண்ட நூல்கள்

# விஷய அட்டவணை

## முதற்சூத்திரம்

---

## மூன்றாஞ்சூத்திரம்

---

உயிர் சூனியம் அன்று, உடம்பும் உயிரன்று, ஐம்பொறிகளும் உயிரன்று, சூக்கும உடம்பும் உயிரன்று, பிராணவாயுவும் உயிரன்று, பிரமமும் உயிரன்று, அனைத்துங்கூடிய சமுதாயமும் உயிரன்று எனக்காரணங்கூறி இந்த உடலின்கண் இவையனைத்திற்கும் வேறாக உயிர் என்பது ஒன்று உளது எனல் 1.

இவ்வுடம்பின்வேறாய் உயிர் ஒன்று உண்டு என்பது எற்றுக்கு? உடம்பே அறியும் எனில், அவயவத்தால் ஒன்றும் குறைபாடில்லாத பிணத்தினிடத்து உடம்பில் அறிவின்று, உறக்கத்தினும் அறிவின்று ஆகலின் உடம்பு அறிதலில்லை என்பது 2.

இந்திரியங்கள் ஒன்றறிந்தது ஒன்றறிதல் இல்லை இவ்வைந்தினும் ஐம்புலன்களையும் அறிவதொன்றுளது என்பது 3.

கரணங்களையும் தன்னையும் கொண்டு அறிவதாகிய உயிர் வேறுண்டு என்பது 4.

---

## நான்காஞ்சூத்திரம்

---

சவுத்திராந்திகர் மதம் பற்றி ஆசங்கித்துப் பரிகரித்து வலியுறுத்தல் 5.

அந்தக்கரணங்கள் கருத்தாவல்லவாமாறும், கருவியாதற்கட்படு முறைமைகளும் அவை உயிரின் வேறுமாறும் உணர்த்துதல் 2—5.

பரமதங்களை எடுத்தோதிப் பரிகரித்து ஆன்மாவிற்கு இலக்கணம் கூறுதல் 6-32.

உயிருண்மைகொண்டு ஆணவமலத்துண்மை கொள்ளாத சமயிகள் தத்த மதத்துக் கேற்பக்கூறும் உயிரிலக்கணங்களும் அவை பொருந்தாமையும் கூறுதல் 19.

உயிருக்கு இலக்கணமாவது மற்றென்னைபோ என்னும் ஐக்கியவாத சைவரை நோக்கிச் சித்தாந்தங்கூறுதல் 20.

உயிருக்கு அநாதி நிலையாகிய தன்னுண்மை கூறல் 20.

பசுத்துவவுபாதியான் மறைப்புண்டு நின்ற அவ்வறிவிச்சை செயல்கள் பின் ஒருபுடை விளங்குதல் 21,22,23.

விஞ்ஞானமயகோசம், ஆனந்தமயகோசம் இரண்டும் முறையே சீவான்மாவும் பரமான்மாவுமாம் என்பார் மதத்தை மறுத்தல்—28.

ஐங்கோசங்களை ஆன்மாவென்னும் உபநிடதத்திற்குத் தாற்பரியம் கூறல்—29.

பரமதங்களைப் பரிகரித்து ஆன்மாவுக்கு இலக்கணம் கூறியது 31.

துரியாதீதத்தில் காரணசரீரமாத்திரையேயன்றிக் கஞ்சுக சரீரமில்லை என்றது 33.

ஐந்தவத்தை என்றவற்றின் பெயரும் வகையும் இடமும் அவற்றதியல்பும் இவையென்பது 33-36.

அவத்தைகட்குக் காரணமிவை யென்பதூஉம் அவற்ற தியல்பும் 37.

தன்னுண்மை கேவலமாதல் 38.

மெய்பொறிகளெல்லாம் காவலன் கொடுத்தபோது சகலனாதல் கூறப்பட்டமை 39.

மலங்களெல்லாம் ஒவினபோது சுத்தமுடையனுமாறு வகுத்துக்கூறல். 40.

---

## ஐந்தாஞ்சூத்திரம்

கன்மத்தோடும் கூடிய வுயிரே காரணமாதலமையும் வேறு மோரிறைவன் எற்றுக்கு? என்பாரை மறுத்தல் 2.

சாங்கியர் மதம் பரிகரித்து வலியுறுத்தியது 3.

மாயேயமே அமையும் இறைவன் எற்றுக்கு என்பாரை மறுத்தல் 3.

முறையே கன்மமும் உயிரும் மாயேயமும் என்னு மிவையே அமையும் என்னும் ஆருகதர் மீமாஞ்சகர் சாங்கியர் முதலியோரை மறுத்து வலியுறுத்தல் 2—4.

அறிவித்தல் பற்றி இறைவனுக்குத்துடக்கின்மை 6.

அவ்வருளே இறைவனுக்கு அணிகலமாதல் 9.

---

## ஆறுஞ்சூத்திரம்

பதிப்பொருளுக்கிலக்கணம் கூறப்படுகிறது. சொரூப லக்கணம் எனப்படும் சிறப்பியல்பு 1.

அறிபொருளனைத்தும் அசத்தென்பது அவ்வறிவியல்புபற்றித் தார்க்கிகரைநோக்கித் தெரித்துணர்த்தல் 2.

இந்திரசாலம், கனக்காட்சி, கழுதிரதம் உவமையாதல் 3.

சற்காரியவாதத்தில் அறிபொருள் அசத்தாமாறு உவமையொடு படுத்துச்சாங்கியரை நோக்கிக்காட்டல். 3.

அறிபொருள் அசித்தசத்தாமென்பது 3.

அநிருவசனீய மென்றது சித்தொடுசத்தாய் நிற்கு மென்றது யாங்ஙன? மென்னும் மாயாவாதியை நோக்கிக் கூறல் 5.

அறிபொருளுமன்று அறியாததுமன்று என விடுப்பதூஉம் அநிர்வசனமாய் முடியுமன்றே! என்னும் மாயாவாதியின் ஆசங்கையை நீக்குதல் 6.

யோகபாவனை செய்து காணவே அமையும் என்னும் பாதஞ்சலர் மதம்பற்றி ஆசங்கித்துப் பரிகரித்தல் 7.

பரம்பரன் அருளினாலே பாவிக்கப்படுவது என்றது மலமாசு தீர்ந்தவழிச் சிவத்தோடு ஒப்பதாய உயிரறிவே அதனையறியும் என்னும் சமவாத சைவரை நோக்கிக் கூறல் 8.

ஒன்றாய் வேறாய் உடனுமாய் அச்சிவம் நிற்பதொன்று என்பது எற்றாற் பெறுதும்? என்னும் சிவ சமவாதி மதம் பற்றி ஆசங்கித்துப் பரிகரித்து வலியுறுத்தப்பட்டது 9.

## ஏழாஞ்சூத்திரம்

நாலாஞ்சூத்திர முதலிய மூன்றானும் பொருளியல்பு கூறப்பட்டது. சாதனங்களதியல்பு மேல் மூன்று சூத்திரங் களால் கூறப்படும்.

மேற்கூறிப்போந்த முப்பொருள்களுட் சாதித்துப் பெறுதற்குரிய அதிகாரம்உடையது பசுப்பொருளே என்பது பாரிசேடவளவையால் கூறப்படுதல்.

உயிர் அவ்விரண்டின் வேறாயும் அதுவதுவாய் நிற்ப தொன்றாம், ஆன்மா அவ்விரண்டனையும் அறியுமுகத்தான் அறியப்படுவதாம் என்பது 2.

சிவனெதிர் முனைத்து நிற்றல் ஆற்றாத அசத்துச் சீவ னால் அறியப்படுவதாய் அதனெதிர் முனைத்துநிற்றல் ஆற்று தற்குக் காரணம் 3.

உயிருக்குச் சத்தசத்து இரண்டினையும் அறியும் உரிமை யுண்மையும், அதற்குக் காரணமும், அஃதாண்டுளதாமாறும் தெரித்துணர்த்தி வலியுறுத்தல் 2—4.

---

## எட்டாஞ்சூத்திரம்

சாதித்துப் பெறும் உரிமை தனக்கே உண்டு என்பது உணர்ந்த உயிர்க்கு மனவெழுச்சி சேறற்பொருட்டு அப் பேறு தனக்குவேண்டற்பாலது என்பதும், சிறந்த சாதன மாவது இது என்பதும், அது வருவாயும் உணர்த்துவது இவ்வெட்டாஞ்சூத்திரம்.

தீக்கை இருவகைத்து என்பதும், அவ்விருவகைக்கும் உரியார் இவர் என்பதும் 2.

சாதாரதீக்கையிற்படும் பாகுபாடும் இயல்பும். சாம்பவ தீக்கை, நயனதீக்கை முதலிய ஆறும் இருவகைப்படுதல் 3.

நிர்ப்பீசதீக்கை என்பது 4.

சபீசதீக்கை என்பது – சாதாரதீக்கைக்குரியார் முத்திறப்படுவர் என்பது – ஔத்திரி தொகையான் ஒன்று, வகையான் இரண்டு, விரியான் நான்கு ஆதல் – சாதாரதீக்கையின் வகையும் அவற்றியல்புகளும் 3—5.

ஆசிரியன் தீக்கைசெய்யுமாறு தொகுத்துக் கூறுதல் 6.

தீக்கை செய்தற்கண் அத்துவாக்கள் ஒன்றிலொன்று வியாத்தியாதல் அறிந்து அடக்குதல் 7—9

இறைவன் குருமூர்த்தியை அதிட்டித்து நின்றுசெய்யும் தீக்கையில் ஏனைமலசத்திகளை ஒழித்து அத்துவசத்தியே மிகுத்துக் கூறியதன்காரணம்.

பருவமடையாதார்க்குத் தீக்கை செய்தலும் அடைந்தார்க்கு அது செய்யாமையும் பழுதாம் எனல்.

அத்துவசத்திச் சிறப்புக் கூறியவாறு 10.

உயிர் பருவமடையும் முறைமை கூறுமுகத்தால் வகையும், அவற்றிற்குவாயில் இவை என்பதும் கூறல் 11.

புறச்சமய நெறிநிற்றல் முதலியன எல்லாம் சைவத்திறத்தடைதற்குச் சோபான முறையான் வாயிலாமாறு 12.

எல்லாம் அருமறையாகமத்தே காணப்பட்டடங்கும் என்பது 14.

சிவாகமத்தின் சிறப்பு 15.

பல சனனங்களிலும் ஆகாதவற்றை யெல்லாம் ஒரு சனனத்திலேதானே செய்யுமாறு வலியுறுத்தியபடி 17.

சைவத்திறத்தடைந்தாரால் செலுத்தப்படும் சரியை முதலிய நான்கும், முத்திநெறியாதற்கட்படும் பேதமும், அவற்றின் பயனும் கூறியது 18.

சரியை முதலிய நான்கிற்கும் இலக்கணம் கூறப்பட்டது 19, 20.

கீழுள்ளவற்றைக் கீழெனக்கண்டு கழித்தாலன்றி மேலுள்ளன பயன்படா என்பது 22.

கன்மவேள்வி முதலிய நான்கும் போகத்தையூட்டுவன, ஓதன்முதல் ஐவகைத்தான ஞானவேள்வி யொன்றுமே வீடு பேற்றைத்தரும் என்பது 23.

ஞானமாவது இத்துணைப்பகுதித்து என்பதும், அவற்றுட் பொதுச்சிறப்பு ஆமாறும், அவற்றிற்குரிய பயன் வேறுபாடும் கூறல் 24.

சரியை முதலிய பதமுத்தி மாத்திரையே யன்றி இயற்றினோர் முடிவின்கண் எவ்வாற்றானும் ஞானநெறியைத் தலைப்பட்டே வீடெய்துவர் எனல் 25

எந்நெறியில் நின்றோர்க்கும் வீடுபேறு எய்துதற்கண் ஞான நெறியாகிய சன்மார்க்கம் இன்றியமையாச் சிறப்பிற்று என்பது 26.

ஞானத்தின் இயல்பும் அதன் பயனும் பொதுவகை யாற் கூறியது 27.

கேட்டலாமாறும், அதன்கண் நிகழும் அநுபவமும் 28.

சிந்தித்தலாமாறும், அதன்கண் நிகழும் அநுபவமும் 29.

தெளிதலாமாறும், அதன்கண் நிகழும் அநுபவமும் 30.

நிட்டையாமாறும் அதன் பயனும் 31.

நிட்டைமேவினோர்களது ஆசாரம் 33

நிட்டைமேவப்பெறாதார்க்கு அது பெறும் உபாயம் கூறல் 34.

சாக்கிரத்தே அதீதத்தைப் புரிந்தவர் பெருமை 35.

சிவசங்கிராந்தவாதிகள் மறுப்பு 36.

இறைவன் ஒப்ப நிற்பினும் ஏகதேசப் பொருள் ஏக தேசப் பொருளே வியாபகப் பொருள் வியாபகப் பொருளே என்பது 37.

சிவாத்துவிதசைவரை நோக்கி ஒப்பநிற்கும் வழியும் வேற்றுமை யுண்டென்பது உவமை முகத்தால் விளக்கு தல் 38.

## ஒன்பதாஞ்சூத்திரம்

பேறு முதலியவற்றை யுணர்ந்தானுக்கு அப்பேறு பயப்பதாகிய சாதனம் செய்யுமாறு வகுத்துக்கூறுவது.

வாதனைபற்றிச் சலியாமைப் பொருட்டுத் திருவைந் தெழுத்தை விதிப்படி உச்சரிக்க எனல் 1.

ஞாயிற்றைக் காணப் பெறாதாருக்கு இருள் நீங்காத வாறுபோல, சிவனையறியப்பெறாதாருக்கு மலம் தவிராது 3.

பதிஞானம் ஒன்றானே பதிப்பொருளை அறியற்பாற் றென்பது 4

திருவஞ்செழுத்தை விதிப்படி உச்சரிப்பார்க்கு வேண் டும் பாவனை 7.

வேண்டப்படும் மந்திரமும் கிரியையும் 8.

ஆசனம், மூர்த்தி, மூர்த்திமான் 9.

ஆன்மசுத்திக்கு ஏதுவாதலான் அந்தரியாகம் ஒரு தலையான் வேண்டப்படும் முத்திசாதனமாதல் 10.

புறத்தேயும் ஒருகுறியில் இறைவனைப் பூசித்தல் வேண்டும். உபகரணம் அயாசகமாய் வந்த அமுத முதலாயினவாம்.

புறப்பூசையும் அங்கமாதல் 11.

இந்தனத்தின் எரி, பாலின் நெய், பழத்தின் இரதம், எள்ளின் கண் எண்ணெய் உவமையாதல். சிவானந்த மேலீடு 12.

---

## பத்தாஞ்சூத்திரம்

---

வேண்டுஞ்செய்திமுறைமைகள் மூன்றுசூத்திரங்களாற் கூறப்பட்டன. ஆகலின், அது சாதனஇயல் எனப்பெயர் பெற்றது. அச்சாதனத்தாற் பெறப்படும் பயன் பெத்தநீக்கமும் முத்திப்பேறும் ஆவன. ஆகலின், இது பயனியல் எனப் பெயர் பெற்றது. இருவகைப் பயனுள் முதற்கண் பெத்த நீக்கம் இச்சூத்திரத்திற் கூறப்படுகின்றது.

பதிஞானத்தாற் காணப்பட்ட இறைவன் ஆன்மாவேயாய் ஒற்றுமைப்பட்டுப் பெத்தநிலையில் நின்றமைபோல, ஆன்மா அவ்விறைபணியின் அவனோடு ஒற்றுமைப்பட்டு வழுவாது நிற்கப்பெறின் யானெனதென்னும் செருக்கறும். அக் காலத்து இவன்செய்யும் இதமகிதங்களெல்லாம் யான் செய்ததென முதல்வன் உடனாய் நின்று ஏன்று கொள்வன். அரன்பணியில் நிற்றலான் பரதந்திரியம் ஒழியும். இவன் செய்யும் இதமகிதங்கள் இவனுக்குப் பணியாய் முடியும். இவனுக்கு இதமகிதம் செய்தார்மாட்டு அவ்வளவினன்றி மிகுதிப்படுதற்குத் துணைக்காரணமாய் இயையும். ஆர்ச்சிப்பும் இவனைப் பந்தியாதொழியும். சஞ்சிதமும் மாயையும் ஆணவமும் இவனைப்பந்திக்கமாட்டா, விண்டொழியும் என்பது 1.

யானெனதென்னும் செருக்கு அறுதியின் பொருட்டு ஏகனாகி நிற்கும் ஞானம் ஒருதலையான் வேண்டற்பாற்று 2.

பாடிகாவலர் அரசன் ஆணைவழி நின்று பிழை செய்தாரைத் தாம் ஈர்த்தவழியெல்லாம் பரதந்திரமாய்க் கிடக்கச் செய்வர். அவர் அவ்வாறு செய்தல் அரசன் ஆணையின் ஆற்றலே, பிறிதன்று. பிழைசெய்தார் அரசனைத்தலைக்கூடி அவன் கருத்தின்வழி யொழுகின் பாடிகாவலரையும் தம் ஆணையின் வழி நிற்கச்செய்யும் சுதந்திரராவார். அதுபோல, இந்திரியங்கள் தம் வழி ஆன்மாவை ஈர்த்தற்குக் காரணம் முதல்வன் ஆணையேயன்றிப் பிறிதில்லை. இந்திரியங்களையும் தன்னையும் உடையனாகிய அம்முதல்வன் தாள்களைச்சார்ந்து அவன்பணியில்உறைத்துநிற்க அவ்விந்திரியங்களையும் அவன் ஆணையின் வழிச் செலுத்தும் சுதந்திரன் ஆவன். உறைத்து நிற்புழியும் பயிற்சிவயத்தான் ஒரோருகால் இந்திரியங்களின் குறும்புநிகழுமாயின் அது முந்தனுடைச் செயலென்று கொண்டு பணியின் வழுவாது ஒழுகுதல் வேண்டும். வினைகள் சத்திமடங்கி ஒழியும். இறைவன் அடிமைத்திறத்து உறைத்து நின்றோன் மறித்துப் பொறிகளின் வழிப்பட்டு அப்பொறிகட்கு அடியனாவானல்லன் 3.

உலகத்தின்கண் மனவாக்குக்காயங்களால் செய்யப்பட்ட புண்ணிய பாவங்களெல்லாம் முதல்வனால் கற்பிக்கப்பட்டனவே. அந்தர்யாமியாகத் தப்பிடத்திலேநின்று இச்சையாதியாற் செலுத்தியும், ஞானேந்திரியங்களினாலே விஷயங்களைப் பற்றுவித்தும், கன்மேந்திரியங்களினாலே தொழில்களைச் செய்வித்தும் செய்கின்றான். கிரியாசத்தியே செய்விப்பது, எவ்விடத்தும் எச்செயலும் முதல்வன் செயலே, அவனன்றி ஓர் அணுவும் அசையாது எனக்கொண்டு தம்மை இழந்து நிற்கப்பெறுவார்மாட்டு அஞ்ஞானகன்மம் பிரவேசிக்கமாட்டா. மெய்யுணர்வான் அடைக்கலம் புக்கா

ரைத்தன்னைப்போலச் சுத்தராகச்செய்து பாதுகாப்பன். இறைவன் சலமுடையனல்லன். அரன்பணியில் நின்றிடல் இதுவாம் என்பன 4.

எத்துணைப் பெரும்பேற்றையும் அளிக்கவல்ல எத்துணை நன்மைகளும், அரன்பணியில் நிற்றலாகியமெய்த்தொண்டால் விளையும் ஞானத்தால் தரப்படும் பேற்றைத் தரத்தக்கன வல்ல. இறைபணியில் நிற்கும் ஞானத்தோடொப்பதாகிய சிறப்புடையது ஒன்றுமின்று என்பது. அரன்பணியில் நிற்கும் ஆற்றல் கூறியபடி 5.

அங்கித்தம்பனம் செய்யவல்லார் அக்கினியின் மூழ்கிக் கிடப்பார், அதனால் அவருக்குத்துன்பமில்லை. விடகாரிவிடத்தின் வலியைக்கெடுப்பர், அவர்க்குக் கொலைத்தொழில் நிகழாது. அதுபோல இந்திரியங்களைத் தம் வழிப்படுத்த வல்ல ஞானிகள் எக்கருமம் செய்தாராயினும் இருவினைகள் அவரைச் சென்றணையா என்பது 6.

---

## பதினொராஞ்சூத்திரம்

---

பெத்தத்தினின்று நீங்கப்பெற்றோர்க்கு முத்திப்பயன் பெறுமாறு வகுத்துக்கூறுவது இச்சூத்திரம்.

கண்ணிந்திரியம் ஒருருவத்தைக் காட்டுதன் மாத்திரையின்றி அவ்வுருவத்தைக் காணுதலும் செய்து உபகரிக்கும். அதுபோல முதல்வன் உயிர் அறியும்படி ஒரு விடயத்தை

அறிவித்தன் மாத்திரையேயன்றி அவ்வுயிருணர்வுடன் அத்துவிதமாய்ச் சென்று அறிதலும் செய்து உபகரித்து வருவான். முதல்வன் இங்ஙனம் அத்துவிதமாய் நின்று உபகரித்துவரும் உரிமையை உள்ளபடி அறிந்து நிற்பானாயின் முதல்வன் திருவடிகளைத் தலைப்படுதற்கண் இச்சை இடையறாது நிகழும். அறிவிச்சைகள் முதல்வன் திருவடிக்கண்ணவாய் ஒருங்கு நிகழவே காயத்தோடு நிற்புழியும் சுத்தனாய் அம்முதல்வன் திருவடியைத்தலைக்கூடப்பெற்றுச் சிவாநுபூதியே சுவாநுபூதியாகக்கொண்டு வாழ்வான் என்பது 1.

பரஞானத்தால் அதனைத் தெளியநோக்கி அன்புசெய்யப்பெற்றார் அவ்வொன்றனையே உணர்ந்துகொண்டு நிற்பர். ஏனைப்பதார்த்தங்களைச் சிறிதும் காண்பாரல்லர். அளவைஞானங்கள் விந்துஞானம், பேதஞானம் என்பன பாவனைஞானமே; அநுபூதிஞானமன்று. சிவஞானமொன்றே சிறப்புடைய ஞானம். சிவஞானத்தைப்பெற்ற சீவன்முத்தர் சிவமொன்றே கண்டிருப்பர். பிராரத்தவாதனையிற் படுவாரல்லர் என்பது 2.

உருவசிவசமவாதிகள் உடம்பாவது அநாதியாய் உயிரைப்பற்றி நீரோட்டம்போல் வருவன. அதற்கொரு முடிவில்லை முத்தியினும் நித்த சுத்த மங்களமயமான திப்பியவுடல் உண்டு என்பர். உடம்புளதாகவே மாயை உண்டு, கன்மம் உண்டு. ஆணவமலமும் விட்டு நீங்குதல் இல்லை, அதுவும் துன்பமே. ஆகலின், அதனை முத்தி என்றதற்குத் தாற்பரியம் பதமுத்தியே எனக் கூறி அவரை மறுத்து மாயாமலம் பற்றறக்கழியுமாறு கூறப்பட்டது 3.

'இரசகுளிகை பரிசித்த மாத்திரத்தில் செம்போடு சகசமாய் நின்ற களிம்பு நீங்கும், செம்புஉருவேற்று நிற்கும். அதுபோல, மெய்ஞ்ஞானம் சேர்ந்த மாத்திரத்தில் உயிரோடு சகசமாய் நின்ற ஆணவமலம் நசிக்கும்' எனக்கூறி; முத்தியினும் சகசமலம் நீங்குமாறில்லை என்னும் பாடாண வாத சைவரையும், 'அருக்கன் ஒளிமேவினும் அருக்கனொடு கண் ஒளி கலந்தாலன்றி இருள் பற்றறக்கழியாது. அதுபோல, மெய்ஞ்ஞானம் சேரினும் சிவம் பிரகாசித்துத் திருவடியை உயிர் பொருந்திலையன்றி ஆணவமலம் பற்றறக் கழியுமாறில்லை' எனக்கூறி; மெய்ஞ்ஞானம்சேர்ந்தமாத்திரையே மலம் நீங்கப்பெறும். அதுவே முத்தி, அதன்மேலும்திருவடியைக் கலத்தல் வேண்டா என்னும் பேதவாத சைவரையும் தடைவிடைகளால் மறுத்தது 4

அரிசியொடும் சகசமாய்நின்ற முளை தவிடு உமிகள் கெட்டொழிய அரிசி கேடின்றி நிலைபெறுதல் கண்டாம். அவ்வரிசி முன்போல வேறொரு நெல்லுத்தோன்றுதற்குக் காரணமாதல் இல்லை. ஏன்? அவை அரிசியின்கண் இல்லை என்பது தெளிவு. அதுபோல, அநாதியே உயிர்களோடு சகசமாய்நின்ற மும்மலங்களும் முத்திநிலைக்கண் விண்டொழியும். விண்டொழியினும் ஏனைப் பெத்தரிடத்துக் காணப்படும். ஆகலின், அவை நித்தப்பொருளேயாம் என்பது 5.

ஆணவமலத்தின் நீங்கி வேறுநின்றஉயிர்கள் இறைவனை விட்டுத்தனித்து நிற்றல் ஓரிடத்துமில்லை என உவமை முகத்தால் விளக்கியது 6.

முதல்வன் அத்துணைக்கலப்புடையனுப் எங்கும் செறிந்து நின்று உபகரித்துவரினும் அஃது அருட்கண்ணுடையார்க்கே அறியவரும். ஏனைபோர்க்கு அறியவாராது. அருட்கண்ணும் பக்குவமுடையார்க்கன்றிக் கிடைக்கப்பெருது. அவ்வருட்கண்ணை முதல்வன் பருவம் பார்த்திருந்து கொடுக்கப்பெறுவர். அவருக்கே முதல்வன் அறிவுக்கறிவாயிருந்து உபகரித்துவரும் அத்துவிதநிலை இனிது விளங்கும் என்பது 7.

ஈசுர அவிகாரவாதி, பரிணுமவாதி, ஐக்கவாதிமதங்கள் அடாதெனக் கூறிப்பரிகரித்தல் 8.

முதல்வனை இரதகுளிகைகளோடு ஒப்புறுத்துதலன்றிப் பொன்னேடு ஒப்புறுத்தல் கூடாது. உயிர் சிவாநுபவம் ஒன்றற்கே உரித்து. ஐந்தொழில் எல்லாவற்றிற்கும் சுதந்திரனுகிய முதல்வனேடு ஒத்து ஒன்ருதல் இல்லை என்பது 9.

கண்ணெளிக்கும் ஞாயிற்றினெளிக்கும் வேற்றுமை பெரிதானற்போல இருபொருளும் சித்தாயினும் சித்திரண்டற்கும் அந்தரங்க வேற்றுமை பெரிதாம். ஐக்கவாதிகளை மறுத்தற்கெழுந்த இரண்டு செய்யுட்களும் இங்கே அருவ சிவசமவாதிகளை மறுத்தற்கும் ஆயின. ஒத்து ஒன்ருய் நிற்கும் என்பர் அருவ சிவசமவாதிகள் 10.

காந்தம் விகாரமின்றி நின்றே இரும்பைவலிக்கும். அது போல இறைவனும் விகாரமின்றியே உயிரைத்தன் வழிப்படுத்துநிற்பன். எரி இரும்பைக்கெடுத்தலின்றித் தன்வண்ணம் ஆக்கித், தன்வண்ணம் ஆக்குதற்குரித்தாகாது இரும்பின்கண் உடன்தோன்றி நிற்கும் கறை மாத்திரம் கெடச் செய்யும். அதுபோல, இறைவனும் உயிரைத் தன்வண்ண

மாகச்செய்து தன் வண்ணம் ஆக்குதற்குரித்தாகாது உயிரின் கண் உடன்தோன்றி நிற்கும் மலம்மாத்திரம் கெடச் செய்வன். நீரோடு சேர்ந்த உப்புத் தன் சுவைமுழுவதும் அந்நீர்க்கு ஆக்கித் தன்னோடு ஒப்பச் சமம் செய்துநிற்கும். அதுபோல, உயிரைச் சேர்ந்த இறைவனும் தனக்குரிய எண் குணங்களையும் அவ்வுயிரின்கட் பதிப்பித்துத் தன்னோடு ஒப்பச் செய்து நிற்பன். இரதகுளிகை செம்பையுருக்கித் தன்னோடு கூட்டி வேதித்துப் பொன்னாகச்செய்தும் பொன்னியல்பைக்காட்டாது தன்னுள் அடக்கி நிற்கும். அதுபோல, இறைவன் உயிரை அவ்வாறெல்லாம் செய்தும் அதன் இயல்பு சிறிதும் தோன்றாது அறிவிறந்து நிற்குமாறு தனது வியாபகத்துள் அடக்கி நிற்கும். உம்பர்பிரான் ஒருவனே உற்பத்தியாதிகளுக்குரியன். கருப்பஞ்சாறு முதலிய சுவைப் பொருள்கள் எல்லாம் ஒன்றாகக் கலந்தவழி உளதாகிய சுவை இவ்வியல்பிற்று எனப்பிரித்தறியவாராது. இறைவனும் உயிரின்கண் அங்ஙனம் கலந்தவழி இவ்வியல்பிற்று எனப்பிரித்தறியவாராது ஆனந்தசொரூபமாய் நிற்பன். உயிர்தானும் சிவாநுபவம் ஒன்றினுக்குமே உரித்து என்பது 11.

---

## பன்னிரண்டாஞ்சூத்திரம்

---

பாசநீக்கமும் சிவப்பேறும் ஆகிய பயன் பெற்றார்க்குச் சீவன் முத்தி நிலைக்கண் நிகழும் இயல்பு கூறுவது இப் பன்னிரண்டாம்சூத்திரம்.

விளக்கற்றம் பார்க்கும் இருள். அதுபோல, அறிவற்றம் பார்க்கும் மும்மலங்கள். ஆகலின், மலங்களையஞ்சிப் பரிகரித்தலும், பரிகரித்தற்குத்துணையாகிய மெய்யன்பரொடுபயிறலும், பயிற்சி நிலைபெறும்படி அவரது திருவேடத்தையும் சிவாலயத்தையும் அரன் எனக்கண்டு வழிபடுதலும் உடையராய் வாழ்தல் சீவன் முத்தர்க்குரிய இயல்பாம் 1.

கழிகாமமுடையராயினார்க்கு அத்தொடர்புடையாரது இணக்கம் கழிபேருவகையைத்தரும். அல்லாரது இணக்கம் வெறுப்புமிகுதியைத்தரும். அதுபோல, சிவாநுபவமுடையாருக்கு அத்தொடர்புடையாரோடு இணங்குதல் உவகை மிகுதியைத்தரும். பிறரோடு இணங்குதற்கண் வெறுப்பு மிகுதி இயல்பான் அவருக்கு உளதாம் என்பது 2.

பாசப்பற்றுடையாரது பற்று விட்டொழிதற்பொருட்டுத் திருவேடமுடைய மெய்யன்பரை அரனெனவே தேறி வழிபடுக என்பது 3.

சிவலிங்கம் முதலிய திருமேனியே சிவமெனக்கண்டு வழிபடுவர் சரியையாளர். அவர்க்குச்சிவன் ஆண்டுவெளிப்படாது நின்று அருள் செய்வன். மந்திரநியாசங்களால் வழிபடும் கிரியையாளர்க்கும், சாத்திபமந்திரங்களால் வழிபடும் யோகிகளுக்கும் அவரவர் விரும்பியவடிவாய் அவ்வத்திருமேனிகளில் அப்போதப்போது தோன்றிநின்று அருள்செய்வன். அன்பு மாத்திரையான் ஆண்டுவழிபடுஞ்ஞானிகட்கு அன்பே தானாய் எப்போதும் ஆண்டுவெளிப்பட்டு நின்று அருள்செய்வன், ஆகலான், அஃதறிந்துவழிபடுதல்வேண்டும் என்பது, தொழப்படுவாரது கருத்துவகை பற்றியும், தொழுவாரது கருத்துவகைபற்றியும் கூறியது 4.

உட்டொழில்செய்வார் புறத்தொழில் செய்தற்கும் உரியர். ஏனையோர் தத்தம் தொழிற்கே உரியர். நாலுபாதத்தின் நிகழும் கிரியையெல்லாம் கர்த்தாவினது உண்மைப் பணியாம். உலகின் மருவாத இன்பத்துள்வைத்த குருவின் உபகாரத்தைக்கருதி நால்வகைத்தொழிலும் ஞானிசெய்தலே கடப்பாடாம். ஞானகுருவே தலையாயகுரு. தாவரசங்கமங்களும் இக்குருவடிவின் வேறல்ல. ஆகலின், அவ்விரண்டினும் வழிபடுக என்பது 5.

ஏனைஞானங்கள் எல்லாம் ஆசாரியனை இன்றியும் அமையும். திருவடிஞானம் ஆசிரியனையின்றி ஒருவாற்றானும் அமையாது. ஆகலின், இவனே ஈசன் என்று இறைஞ்சி ஏத்துக என்பது 6.

சிவபேதம் அனைத்தும் குரு மூர்த்தமே எனத்தேறி ஞானாசாரியனை வழிபடுக, அங்ஙனம் வழிபடப்பெறின் சிவன் இக்குருவை ஆவேசித்து நின்று நாடோறும் செய்யும் பரிசம் முதலியவற்றான் அவ்வுயிரைத் தன்வண்ணமாகச் செய்தருளுவன். ஏத்தினோர்க்குவரும் பயன் கூறியது இது. 7.

**விஷய அட்டவணை**

**முற்றிற்று**

# உரைப்பாயிரம்

பண்ணிசைவெம் பரிதிமதி திலதயிலந் தீயிரும்பு
பாணி யுப்பு
விண்ணனில முடலுயிர்நீர் நிழலுச்சிப் பளிங்குபகல்
விளக்குப் பானீர்
கண்ணிரவி யுணர்வொளிபோற் பிறிவரிய வத்துவிதக்
கலவி காட்டித்
தண்ணளிவைத் தெனையாண்ட துறைசைநமச் சிவாயகுரு
சரணம் போற்றி.

— ஸ்ரீ மாதவச் சிவஞானயோகிகள்.

உ

சிவமயம்.

திருச்சிற்றம்பலம்

# சிவஞான சித்தியார் சுபக்கம்.

## மூலமும் — உரையும்.

ஸ்ரீசுப்பிரமணியதேசிகர் பதவுரை —
ஸ்ரீ மாதவச்சிவஞானயோகிகள் பொழிப்புரைகள்.

*சிவஞானபோதநூற்பொருள் பிற்காலத்தார்க்கு இனிது 'விளங்குமாறு விரித்தல் யாப்பான் நூல்செய்வான் புகுந்தவாசிரியர் எடுத்துக்கொண்டபொருள் இடையூறு நீர்ந்தினிதுமுடிதற்பொருட்டும், இந்நூ னின்று நிலவுதற்பொருட்டும், முதற்கட் செய்து கொண்ட கடவுள்வாழ்த்து மாணுக்கர்க்கு அறிவுறுத்தற்பொருட்டுச் செய்யுளாற் றெரிக்கின்ருர்.*

காப்பு.

### விநாயகர் வணக்கம்.

ஒருகோட்ட னிருசெவியன் மும்மதத்த
நால்வாயைங் கரத்த னாறு
தருகோட்டம் பிறையிதழித் தாழ்சடையான்
றருமொருவா ரணத்தின் றாள்கள்
உருகோட்டன் பொடும்வணங்கி யோவாதே
யிரவுபக லுணர்வோர் சிந்தைத்
திருகோட்டு மயன்றிருமால் செல்வமுமொன்
றோவென்னச் செய்யுந் தேவே.

## சுப் — பதவுரை.

ஆறு - கங்கையும்,—தரு கோட்டு அம் பிறை - தன் ஞற்றரப்பட்ட வளைவான் அழகுபெற்ற பிறையும்,— இதழி – கொன்றை மாலையும் (அணிந்த),— தாழ் சடையான் தரும் - தாழ்ந்த சடையையுடைய சிவபிரான் அளித்தருளிய,—ஒரு கோட்டன் - ஒற்றைக் கொம்பையுடையனும்,—இரு செவியன் - இரண்டு (முறம்போலுஞ்) செவிகளையுடையனும்,—மும்மதத்தன் - மூன்று மதங்களையுடையனும்,—நால்வாய் ஐங்கரத்தன் – நான்ற வாயையுடையனும் ஐந்து கரங்களை யுடையனுமாகிய, — ஒரு வாரணத்தின் தாள்கள்-ஒப்பற்ற வாரணமுகத்தானுடைய திருவடிகள்,— உருகு ஒடு அன்பொடும்-உருகுதலுடன் ஓடப்பெற்ற பேரன்பான், — ஓவாதே வணங்கி — இடையருது (தம்மை) வழிபட்டு,—இரவு பகல்-இரவும் பகலும், —உணர்வோர் சிந்தை - தியானிப்போர் அறிவின் கண்ணதாகிய,—திருகு ஓட்டும் - மலக்கோணைத் துரக்கும் (அதுவேயுமன்றி),-அயன் திருமால் செல்வமும் ஒன்றோ என்ன -அயன் அரி முதலியோர் வாழ்வும் ஒரு பொருளன்றென வெறுப்ப,—தேவே செய்யும் - சிவமாந் தன்மைப் பெருவாழ்வையுந் தரும் என்க.

## சிவ — பொழிப்புரை.

என்பது: *கங்கையும் பிறையுங் கொன்றையு மணிந்த சடையா னளித்தருளிய ஒருகோடு முதலியவற்றையுடைய வணுகிய வாரணமுகத்தா னுடைய திருவடிகள், பேரன்பா னிடையறாது தம்மை வழிபட்டுத் தியானிப்போ ரறிவின் கண்ணதாகிய மலக்கோணைத் துரக்கும்; அதுவேயுமன்றி; அயனரிமுதலியோர் வாழ்வு மொருபொருளன்றென வெறுப்பச் சிவமாந்தன்மைப் பெருவாழ்வையுந் தரு மென்பதாம்.*

சிந்தைத் திருகோட்டித் தெய்வத்தன்மை செய்யவல்ல தாள்களுக்கு இடையூற்றை யோட்டி இந்நூன் முடிவுபெறச் செய்தல் அருமையன் றென்பது கருத்து.

கங்கையின் செருக்கடக்கிப் பிறையை வாழ்வித்த பெருமான் மகனாதலானும் அச்சீலமுடைமை தெளியப்படுமென்பார், ஆறுதரு கோட்டம் பிறையிதழித் தாழ் சடையான் றருமொரு வாரணமென்றார்.

இதழியு முடன்கூறினர், திருவடையாள மாலையாதலின்.

இதழித்துணர்போலத் தாழ்ந்தசடையானென உவமத்தொகையாகக்கொண்டுரைத்தலு மொன்று.

தருகோட்டம்பிறை தன்னாற் றரப்பட்ட வளைவா னழகுபெற்ற பிறை.

இருசெவியனென்றது, இசையெச்சத்தால், இரண்டு முறம் போலுஞ் செவியனெனப் பொருடந்து நிற்றலின், ஒருகோடு முதலியனபோலப் பிறிதினியைபுநீக்கிய விசேடணமாதற் கிழுக்கின்மை யுணர்க.

யானையுறுப்புக் கழுத்திற்கு மேலன்றியின்மையான் மும்மதத்தனாதல் யாங்ஙன மென்பார்க்கு, மும்மதம் யானைக்கு அடையென்பாரும், ஒருகோட்டன் முதலியன போல மும்மதத்தனென விநாயகப்பிரானுக்கே யடையாய் நிற்றலின் யானைக்கடை யாமாறு யாங்ஙனமென மறுத்து இச்சா ஞானக் கிரியைகள் ஈண்டு மும்மதமென உருவகஞ் செய்யப்பட்டன வென்றுரைப்பாரும்; ஒருகோடு முதலிய வேனை யடையெல்லாம் உறுப்பினையே யுணர்த்தி நிற்றலின் இதுமாத்திர மினம்பற்றா துருவகமாதல் செல்லாமையானும், உருவகஞ் செய்தற்குரியதோரியைபுவிசேடமின்மையானுங்

கந்தன் முதலியோரையு மக்கருத்துப்பற்றி மும்மதத்தனெனல் யாண்டுமின்மையானும், அதுவுமுரையன்றென மறுத்துப் பஞ்சாக்கரத்தின் பேதமாகிய எட்டெழுத் தாறெழுத்து நாலெழுத்து முதலியனவும் பஞ்சாக்கரமென வழங்கப்படுமாறு போல மும்மதத்தின் வகையாகிய ஒருமதமு மிருமதங்களு மும்மதமென வழங்கப்படுமாகலின் அது பற்றி ஆசங்கை யென்னையென் றொழிவாரு முளர்.

வாரணமுஞ் சிந்தையும் ஆகுபெயர்.

திருகு முதனிலைப்பெயர்.

ஒகாரம் எதிர்மறை.

இஃதெண்ணலங்காரம்.

ஈண்டு "இறைவனையு மிறைவனு லியம்புநூலு மீண்டளவும் பொருளியல்பும் வேண்டுஞ் செய்தி-முறைமைகளும் பெத்தமொடு முத்தியெல்லாம்" என்றெடுத்துக்கொண்ட முறையே வைத்துப் பரபக்கங்களை எடுத்தோதி மறுத்த வாசிரியர், இனி யம்முறையே சுபக்கம் கூறுகின்றார்.

உ

சிவமயம்.

திருச்சிற்றம்பலம்.

# சிவஞான சித்தியார் சுபக்கம்.

## மங்கலவாழ்த்து.

திருவிருத்தம் — 5.

## பாயிரம்

# மங்கலவாழ்த்து.

---

### சிவபெருமான்.

*அறுவகைச் சமயத் தோர்க்கு மவ்வவர் பொருளாய் வேறுங்*
*குறியது வுடைத்தாய் வேதா கமங்களின் குறியிறந்தங்*
*கறிவினி லருளான் மன்னி யம்மையோ டப்ப னாகிச்*
*செறிவொழி யாது நின்ற சிவனடி சென்னி வைப்பாம்.*

### சுப் — பதவுரை.

அறுவகைச் சமயத்து - (புறப்புறம் புறம் அகப்புறம் அகமென்னு நான்கனுள் அகச்சமயமொழித்து ஒழிந்த முக்கூற்றுப் புறங்களிலே தனித்தனி) அறுவகைப்பட்ட சமயங்களி னின்றுகொண்டு,—ஓர்க்கும் - (அவற்றுள்ளும் பல வேறுவகைப்பட) ஆராய்ந்தறிகின்ற,—அவ்வவர் பொருளாய் – அவரவர்கொண்ட முதற்பொருளாய்,— வேறுங் குறியது உடைத்தாய் – அவரின் வேறாகிய (பாடாணவாத முதலிய அகச்சமயத்தார்க்கு இலயம் போகம் அதிகாரமென்னு மூன்றவத்தையின் முறையே சத்தியும் உத்தியோகமும் பிரவிருத்தியு மென்னுந்தொழில் வேறுபாடுபற்றிச் சிவன் சதாசிவன் மகேசனென்னும் பெயருடைய அருவம் அருவுருவம் உருவமென்னுந் தடத்தக்) குறியே குறியாக வுடைத்தாய்,— வேதாகமங்களின் குறி இறந்து – (சித்தாந்தசைவர்க் கத்தடத்தக் குறியேயன்றி) வேதாகமங்களின் கருத்திற் கதீதமாய்,— அறிவினில் அருளான் மன்னி – உயிர்க்குயிராய்,—அங்கு

அம்மையோடு அப்பன் ஆகி - (உயிர்கட்கெல்லாம் அறிவைப் பிறப்பிக்கும்) அம்மை அப்பனுமாகி,—செறிவு ஒழியாது நின்ற—(எங்கணும் எக்காலமுஞ்) செறிந்து வியாபகமாய் நின்ற,— சிவன் அடி சென்னி வைப்பாம் –சிவபிரான் றிருவடியைச் சிரமேற் கொள்வாம் என்க.

## சிவ — பொழிப்புரை.

எ-து புறப்புறம் புறம் அகப்புறம் அகம் என்னு நான்கனுள் அகச்சமயமொழித்தொழிந்த முக்கூற்றுப்புறங் களிற் றனித்தனி யறுவகைப்பட்ட சமயங்களி னின்று கொண் டவற்றுள்ளும் பலவேறுவகைப்பட வோர்த்துணர் கின்ற அவரவர்கொண்ட முதற்பொருளாய், அவரின் வேறாகிய பாடாணவாதமுதலிய அகச்சமயத்தார்க்கு இலயம் போகமதிகாரமென்னு மூன்றவத்தையின் முறையே சத்தியு முத்திபோகமும் பிரவிருத்தியுமென்னுந் தொழில் வேறு பாடுபற்றிச் சிவன் சதாசிவன் மகேசனென்னும் பெயருடைய அருவம் அருவுருவம் உருவமென்னுந் தடத்தக்குறியே குறியாகவுடைத்தாய்ச், சித்தாந்தசைவர்க்கு அத்தடத்தக் குறியேயன்றி வேதாகமங்களின் கருத்திற்கதீதமாய், உயிர்க் குயிராய், உயிர்கட்கெல்லாமறிவைப் பிறப்பிக்கும் அம்மை யப்பனுமாகி, எங்கணுமெக்காலமுஞ் செறிந்து வியாபகமாய் நின்ற சிவபிரான் றிருவடியைச் சிரமேற் கொள்வாமென் பதாம்.

பரபக்கத்துட் புறப்புறச்சமயத்தாரையும் புறச்சமயத்தா ரையுமறுப்பவே, அம்முறைபற்றி அகப்புறச்சமயத்தாரும் மறுக் கப்பட்டாரேயாவ ரென்னுங் கருத்தான், அவரையுமுடன்றழுவ அறுவகைச்சமயத்தெனப் பொதுப்படக்கூறினர்.

ஓர்த்தல்—ஆராய்தல்.

விசேடியமடியாகலின் உடைத்தாயென்றார்.

சிவனடி யென்றது உபசாரம்.

இதனுள், அறுவகைச்சமயத்தோர்க்கு மவ்வவர்பொருளாயென வே மேற்கூறிப்போந்த பரபக்கத்துப்பொருளும், வேறுங்குறியது வுடைத்தா யெனவே முதற்சூத்திர முதலிய வைந்துசூத்திரத்திற் பெறப்படுந் தடத்தப்பொருளும், வேதாகமங்களின் குறியிறந்தெனவே இரண்டுமன்றி யேனைச்சொரூபலக்கணங்கூறும்ஆறுஞ்சூத்திரப் பொருளும், அறிவினிலெனவே ஆன்மசொரூபங்கூறு மேழாஞ்சூத் திரப்பொருளும், அருளான் மன்னி யெனவே ஞான தரிசனங்கூறு மெட்டாஞ் சூத்திரப்பொருளும், அம்மையோ டப்பனுகியெனவே ஞானமு ஞேயமு ஞாதிருவுமாகக் காணப்படு மொன்பதாஞ் சூத் திரப்பொருளும், செறிவொழியாது நின்ற வெனவே ஏகனுகிநிற்றல் கூறும் பத்தாஞ்சூத்திரப் பொருளும், சிவனடி சென்னி வைப்பா மெனவே அரன்மலரடிக்கீழிருத்தல் கூறும் பதினொன்றுஞ் சூத் திரப்பொருளும், சென்னிவைப்பா மென்னுஞ் சொல்லியல்பான் அணைந்தோர் தன்மை கூறும் பன்னிரண்டாஞ் சூத்திரப்பொருளுங் குறிப்பானறியக் கிடந்தன.

இங்ஙனந் தொகுத்துக் காட்டுதல் மங்கலவாழ்த்துக்கு இலக் கணமென உணர்க.

இனி, இதனுட் கூறப்படு மறுவகைவினையெச்சங்களானும் முதல்வனுடைய அறுவகைக் குணங்களுங் கூறப்பட்டன வென் றுரைத்தலு மொன்று.

அதுகாட்டுதும்: அவ்வவர் பொருளாயென்றதனல் அங்ஙனம் பல வேறுவகைப்பட நிற்கு மகாசத்தியாகிய அளவிலாற்றலுடை மை கூறப்பட்டது; வேறுங்குறியது வுடைத்தா யென்றதனல் அநாதிபோத மநாதி முத்தத்தன்மை யெனப்படும் இயல்பாகவே

பாசங்களினீங்குதல் கூறப்பட்டது; நிராமயான்மா வெனப்படும் இயற்கை யுணர்வினனாதலுமீண்டே யடங்கும்; வேதாகமங்களின் குறியிறந்தென்றதனாற் சுதந்திர னெனப்படுந் தன்வயத்தனாதல் கூறப்பட்டது; அறிவினி லருளான் மன்னி யென்றதனாற் சருவஞ் ஞத்துவமெனப்படும் முற்றுமுணர்தல் கூறப்பட்டது; அம்மையோ டப்பனாகி யென்றதனால் அலுத்தசத்தி யெனப்படும் பேரருளுடைமைகூறப்பட்டது; விசுத்ததேகமெனப்படுந் தூயவுடம்பினனாதலு மீண்டே அடங்கும்; செறிவொழியா தென்றதனாற்பூர்த்தியெனப் படும் வரம்பிலின்பமுடைமை கூறப்பட்டதென்றுணர்க. இன்னும் விரிப்பிற் பெருகும். (1)

## முன்னூற்சிறப்பு.

என்னையிப் பவத்திற் சேரா வகையெடுத் தென்சித் தத்தே,
தன்னைவைத் தருளினாலே தாளிணை தலைமேற்சூட்டு, மின்னமர்
பொழில்சூழ் வெண்ணெய் மேவிவாழ் மெய்கண் டானூல்,
சென்னியிற் கொண்டு சைவத் திறத்தினைத்தெரிக்க லுற்றாம்.

### சுப் — பதவுரை.

என்னை— (பவமாயக் கடலிலழுந்துகின்ற) என்னை,—இப்பவத்திற் சேராவகை அருளினாலே எடுத்து— அதன் கணழுந்தாதவண்ணம் கருணைக்கையாலெடுத்து,— என் சித்தத்தே தன்னை வைத்து—என்னறிவின் கண்ணே தற்சொரூபத்தை விளக்குதற் கெழுந்தருளி வந்து,—தாள் இணை தலைமேற் சூட்டும் – திருவடிகளைச் சென்னியிற்

சூட்டித் தீக்கை செய்தருளிய,—மின் அமர் பொழில் சூழ் வெண்ணெய் மேவிவாழ்—மின்னலேயுடைய மேகந்தங்கு தற்கிடமாகிய சோலேகள் சூழ்ந்த திருவெண்ணெய் நல்லூ ரென்னுந் திருப்பதியில் விருப்பமுற்று வாழ்கின்ற,—மெய் கண்டான் நூல் – மெய்கண்டதேவன் (மொழிபெயர்த் துரைத்தருளிச்செய்த) சிவஞானபோத நூலே,—சென்னி யின் கொண்டு – (ஏனையாசிரியன்மார் செய்த பிரமாண நூல்கட் கெல்லாஞ்) சிரத்தானமாகக்கொண்டு,—சைவத் திறத்தினைத் தெரிக்க லுற்றும் — (அதனிற் கூறப்படுஞ்) சைவாகமப் பொருட்கூற்றை விளக்குவாம் என்க.

## சிவ — பொழிப்புரை.

*எ-து. பவமாயக்கடலிலமுழுந்துகின்ற வென்னை அதன்க ணழுந்தாத வண்ணங் கருணைக்கையா லெடுத்து என்னறி வின் கண்ணே தற்சொரூபத்தை விளக்குதற்கெழுந்தருளி வந்து திருவடி சென்னியிற் சூட்டித் தீக்கைசெய்தருளிய வெண்ணெய் மெய்கண்டதேவன் மொழிபெயர்த்துரைத்தரு ளிச்செய்த சிவஞானபோத நூலே, ஏனையாசிரியன்மார் செய்த பிரமாண நூல்கட்கெல்லாஞ் சிரத்தானமாகக் கொண்டு அத னிற் கூறப்படுஞ் சைவாகமப் பொருட்கூற்றை விளக்குவா மென்பதாம்.*

*இந்நூலுக்கு வழிகூறியவாறு.*

*எடுத்தென்றது குறிப்புருவகம்.*

*வைத்தென்றது உபசாரவழக்கு; "அன்போடியைந்தவழக்கு" ( திருக்குறள் – அன்புடைமை – 3. ) என்றாற்போல.*

*சென்னியின் இன் உவமவுருபு.* (2)

## நுதலியபொருண் முதலியன.

---

பண்டைநற் றவத்தாற் றோன்றிப் பரமனைப் பத்தி பண்ணுந்
தொண்டரைத் தானே தூய கதியினிற் றொகுப்பன் மார்க்கர்
கண்டநூ லோதி வீடு காதலிப் பவர்கட் கீசன்
புண்டரி கத்தாள் சேரும் பரிசினைப் புகல லுற்றாம்.

### சுப் — பதவுரை.

(சாமுசித்தர் வைநயிகர் பிராகிருத ரென்னு மிவருள் ஆற்றலு மறிவுங் காதலு மில்லாத பிராகிருத்தரை யொழித்து ஒழிந்த இருவரின்) பண்டை நற்றவத்தால்- முற்செய் தவவிசேடத்தால்,—தோன்றி-(சாமுசித்தராய்ப்) பிறந்து,—பரமனைப் பத்தி பண்ணும் தொண்டரை- முதல் வனிடத்தே (வீடுகாதலித்துப்) பத்தி பண்ணுகின்ற சிவ பத்தரை,— தானே — (விஞ்ஞானகலர் பிரளயாகலரைப் போல நூல் வழியாலன்றித்) தானே,—தூய கதியினில் தொகுப்பன் - சிவகதியிற் சேர்த்துவ னுகலின் (அவர்க்கு நூல் வேண்டாமையான்),— மார்க்கர் — ஞானிகளெல் லாம்,— கண்ட நூல் ஓதி - பிரமாணமென்றறிந்து கைக் கொண்ட நூலை ஓதி (அதன்வழியான்),—வீடு காதலிப் பவர்கட்கு-(முறைமையின் மந்ததர முதலிய சத்திநிபாத முடையராய்) முத்திபெற விரும்பும் வைநயிகராயினார்க்கு,— ஈசன் புண்டரிகத் தாள் சேரும் பரிசினை—சிவபெரு மானுடைய செந்தாமரை மலர்போன்ற திருவடி கூடு முறைமையினை,— புகலலுற்றாம் — (ஈண்டு வகுத்துக்) கூறுகின்றாம் என்க.

## சிவ — பொழிப்புரை.

எ-து. சாமுசித்தர் வைநயிகர் பிராகிருதரென்னுமிவருள், ஆற்றலு மறிவுங் காதலுமில்லாத பிராகிருதரையொழித்து, ஒழிந்தவிருவரின் முற்செய் தவவிசேடத்தாற் சாமுசித்தராய்ப் பிறந்து வீடு காதலிக்குஞ் சிவபத்தரை விஞ்ஞாகலர் பிரளயாகலரைப்போல நூல்வழியா னன்றித் தானே சிவகதியிற் சேர்த்துவனாகலின் அவர்க்கு நூல் வேண்டாமையான், முறைமையின் மந்ததர முதலிய சத்திநிபாத முடையவராய் நூல்வழியான் முத்திபெறவிரும்பும் வைநயிகராயினார்க்குச் சிவகதி கூடுமுறைமையினை ஈண்டு வகுத்துக் கூறுகின்ற மென்பதாம்.

சன்மார்க்கரை மார்க்கரென்றது தலைக்குறை. சன்மார்க்கராவார் ஞானிகள்.

கண்டநூல் அவர்களெல்லாம் பிரமாணமென்றறிந்து கைக்கொண்டநூல்.

நுதலியபொருளுங் கேட்போரும் பயனுங் கூறியவாறு. (3)

---

## அவையடக்கம்.

---

மறையினா லயனான் மாலான் மனத்தினால் வாக்கான் மற்றுங்,
குறைவிலா வளவி னாலுங் கூறொணா தாகி நின்ற, விறைவனார்
கமல பாத மின்றியா னியம்பு மாசை, நிறையினார் குணத்
தோர்க் கெல்லா நகையினை நிறுத்து மன்றே.

## சுப் — பதவுரை

மறையினுல் — வேதங்களினுலும், — அயனுல் –அயனுலும்,—மாலால்–மாலாலும்,— மனத்தினுல் – மனத்தினுலும்,— வாக்கால்–வாக்கினுலும்,— மற்றும் குறைவு இலா அளவினுலும்–வேறுங் குறைவில்லாத அநுமானப் பிரமாணத்தாலும்,—கூற ஒணுது ஆகி நின்ற–அறிதற் கரிதாய் நின்ற,— இறைவனுர் கமல பாதம் – முதல்வனது கமலமலர்போலும் பாதமென்றுபசரித்துக் கூறப்படும் இயல்பை,—இன்று யான் இயம்பும் ஆசை – இன்றுயான் சொல்லுவலென் றெழுந்த எனது புல்லியவாசை,—நிறையினுர் குணத்தோர்க்கெல்லாம்–சால்புடையராய குணத்தினையுடையாரெல்லார்க்கும்,—நகையினை நிறுத்தும் அன்றே – ஏ ஏ இஃதோ இவனறிவென்றெள்ளி நகையாடுதற் கேதுவாம் என்க.

**இனி,** மறையினுல் – வேதங்களாலும்,—அயனுல் – அவ்வேதத்திற் கங்கமாய் அயனுற் செய்யப்பட்ட பதினெண்புராண நூல்களாலும்,— மாலால் – மாயோனவதாரமாகிய வியாசனுற் செய்யப்பட்ட இதிகாச நூலாலும்,— மனத்தினுல் — மநு முதலிய விருடிகண் மனத்தானினைந்து செய்யப்பட்ட மிருதி நூல்களாலும்,— வாக்கால் - அவ்வேதத்தைக் கருமகாண்டம் ஞானகாண்டமென் றிருவகைப்படுத் தெடுத்துக்கொண்டு அதன் பொருளை நிச்சயித்துரைக்குஞ் சாத்திரமாகிய பூருவ மீமாஞ்சை உத்தரமீமாஞ்சைகளாலும்,—மற்றுங்குறைவு இலா அளவினுலும் – வேறுங் குறைவில்லாத அளவை நூலாகிய தருக்க சாத்திரங்களாலும்,—கூற ஒணுது ஆகி நின்ற இறைவனுர் கமலபாதம்–சொல்லுதற்கரிதாய் நின்ற சிவபிரான் கமலபாதமென்றலு மொன்று.

## சிவ — பொழிப்புரை.

**எ-து.** வேதமுதலியவற்றானு மறிதற்கரிய முதல்வன தியல்பை யான் சொல்லுவலென்றெழுந்த எனது புல்லியவாசை, சால்புடையாரெல்லாரும் ஏயேயிஃதோவிவனறிவென்றெள்ளி நகையாடுதற் கேதுவா மென்பதாம்.

*அயனான் மாலான் மனத்தினால் வாக்காலென்புழி, ஆலுருபு முன்னையவிரண்டும் வினைமுதற்பொருண்மையினும், பின்னைய விரண்டுங் கருவிப்பொருண்மையினும் வந்தன; சாத்தனாற் கண்ணானோக்கப்பட்ட தென்றாற்போல.*

*ஈண்டளவென்றது அனுமானப் பிரமாணத்தை.*

*அயன்மா லென்றது உபலக்கணம். கூறொணா தென்றது உபசாரம்.*

*இனி, அயனென்றது அவ்வேதத்திற்கங்கமாய் அயனாற் செய்யப்பட்ட பதினெண்புராணநூலையும், மாலென்றது மாயோனவதாரமாகிய வியாதனாற் செய்யப்பட்ட இதிகாச நூலையும், மனமென்றது மனுமுதலிய இருடிகளான் மனத்தானினைந்து செய்யப்பட்ட மிருதிநூலையும், வாக்கென்றது அவ்வேதத்தைக் கருமகாண்டம் ஞானகாண்டமென்றிருவகைப்படுத்தெடுத்துக்கொண்டு அதன் பொருளை நிச்சயித்துரைக்கும் சாத்திரமாகிய பூருவமீமாஞ்சை உத்தரமீமாஞ்சைகளையும், அளவென்றது அளவை நூலாகிய தர்க்க சாத்திரத்தையும் ஆகுபெயரானுணர்த்தின வெனக்கொண்டு வேதத்தானு மதற்கங்கமான புராண மிதிகாச மிருதி மீமாஞ்சை தருக்கங்களானுங் கூறொணாதபாதமென்றுரைத்தலு மொன்று.*

**அவையடக்கங் கூறியவாறு.** (4)

## ஆசங்கைநீக்கல்.

அருளினு லாகமத்தே யறியலா மளவி னாலுந்
தெருளலாஞ் சிவனை ஞானச் செய்தியாற் சிந்தை யுள்ளே
மருளெலா நீங்கக் கண்டு வாழலாம் பிறவி மாயா
விருளெலா மிரிக்க லாகு மடியரோ டிருக்க லாமே.

### சுப் — பதவுரை.

(இறைவனியல்பு அப்பெற்றித்தாயினும்) சிவனை — அவ்விறைவனை,—ஆகமத்தே - (அவனருளிய நூலெனப் படும் வேதசாரமாகிய) சிவாகமத்தின்,—அருளினல் அறியலாம் – (அநுபவமுடைய தேசிகர்) அருளிச்செய் யும் உபதேசத்தாற் கேட்டறியலாம்,—அளவினலும் தெருளலாம் – (கேட்டதனை அதற்கனுகூலமான) அளவையாற் சிந்தித்து மறியலாம்,— சிந்தையுள்ளே — (சிந்தித்ததனைத்) தன்னறிவின்கண்ணே,— ஞானச்செய் தியால் மருளெலாம் நீங்கக் கண்டு வாழலாம்-சிவ ஞானத்தான் மாசறத்தெளிந்து மறியலாம்,—பிறவி மாயா இருளெலாம் இரிக்கல் ஆகும்-(அதனுற்) பிறவி மாயா மைக் கேதுவாகிய பாசக்ஷயமும் பண்ணலாம்,—அடிய ரோடு இருக்கலாமே–(அதனல்)அவனடியாரோடு கலந்து (நிட்டைகூடிச் சிவானந்தானுபூதியும் பெற்)றிருக்கலாம் என்க.

### சிவ — பொழிப்புரை.

எ-து. இறைவனியல்பு அப்பெற்றித்தாயினும் அவனை அவ்விறைவனூலெனப்படும் வேதசாரமாகிய சிவாகமத்தின னுபவமுடைய தேசிகாருளிச்செய்யும் உபதேசத்தாற்

கேட்டறியலாம்; கேட்டதனை அதற்கனுகூலமானவளவை யாற் சிந்தித்துமறியலாம்; சிந்தித்ததனைத்தன்னறிவின் கண்ணே சிவஞானத்தான் மாசறத் தெளிந்துமறியலாம்; அதனாற் பாசக்ஷயம்பண்ணி நிட்டைகூடிச் சிவானந்தானு பூதியும் பெறலாமென்பதாம்.

உம்மை எண்ணின்கண் வந்தது.

மேல் அவையடக்கத்துட் கூறியதுபற்றி நிகழு மாசங்கையை நீக்கிற்று.

இக்கடவுள்வணக்க முதலாயின வெல்லாம், பரபக்கத்து நூன் முகத்தாற் கூறிப் போந்தனவே யாயினும், பரபக்கஞ் சுபக்கமென விதனை இருநூலாதலுங் கொள்ள வைத்தமையின், ஈண்டும் வேறு கூறினர்.

அறுவகைச்சமயத்தெனு முதற்செய்யுளிற் கடவுள் வணக்கங் கூறுமுகத்தாற் சுபக்கத்தி னிறைவனுவா னிவனென்பதூஉம், ஏனை நான்கு செய்யுளினும் வழிமுதலியன கூறுமுகத்தான் அவ் விறைவனு லியம்பப்படும் நூலிவை யென்பதூஉம், அவற்றுட்பொது நூல் சிறப்புநூலென்னும் வேறுபாடு முணர்த்தப்பட்டன. (5)

**மங்கலவாழ்த்து முடிந்தது.**

ஆகத்திருவிருத்தம் — 6.

உ

சிவமயம்.

திருச்சிற்றம்பலம்.

# சிவஞான சித்தியார் சுபக்கம்.

---

# அளவையிலக்கணம்.

திருவிருத்தம் — 14.

# அளவையிலக்கணம்.

இனி, நிறுத்தமுறையானே பொருளுண்மைக்களவு கூறுவான் றொடங்கி, அவ்வளவையி னியல்புணர்ந்தார்க்கன்றி அதனையெடுத் துக் காட்டலாகாமையின், முதற்கண் அளவையி னியல்பு பதினான்கு செய்யுளாற் கூறுகின்றார்.

அளவை காண்டல் கருதலுரை யபாவம் பொருளொப் பாறென்ப, ரளவை மேலு மொழிபுண்மை யைதி கத்தோ டியல்பெனநான், களவை காண்ப ரவையிற்றின் மேலு மறைவ ரவையெல்லா, மளவை காண்டல் கருதலுரை யென்றிம் மூன்றி னடங்கிடுமே.

## சுப் — பதவுரை.

அளவை – பிரமாணமாவது,—காண்டல் – காட்சி யும்,—கருதல் — அனுமானமும்,—உரை – ஆகமமும்,— அபாவம் – இன்மையும்,–பொருள் - அருத்தாபத்தியும்,— ஒப்பு (என) — உவமையு மென,—ஆறு என்பர் - அறு வகைப்படுமென்பாரும்,—அளவை மேலும் — அவ்வறு வகைப் பிரமாணங்கட்கு மேலும்,—ஒழிபு — பாரிசேட மும்,—உண்மை – சம்பவமும்,—ஐதிகத்தோடு — உலக வாதமும்,—இயல்பு என – சகசமு மென,—நான்கு அளவை காண்பர் – நான்கு பிரமாணமுள வென்பாரும்,– அவையிற்றின் மேலும் அறைவர் – அப்பத்துக்கு மேலும் (பிரமாணங்களுள) வென்பாருமுளர்,—அவை யெல்லாம் அளவை - அவையெல்லாம் பிரமாணமேயாயினும்,–காண் டல் — காட்சியும்,— கருதல் — அனுமானமும்,— உரை

என்ற - ஆகமமு மென்ற,—இம்மூன்றின் அடங்கிடுமே—இம்மூன்றனு ளடங்குவன (வன்றி வேறுவனவல்ல) என்க.

## சிவ — பொழிப்புரை.

எ-து பிரமாணமாவது காட்சிமுதல் அறுவகைப்படு மென்பாரும், அவ்வறுவகைப் பிரமாணங்கட்குமேலும் பாரிசேடமுதலிய நான்கு பிரமாணமுள வென்பாரும், அப்பத்துக்குமேலும் பிரமாணங்களுள வென்பாருமுளர். அவையெல்லாம் பிரமாணமேயாயினுங் காட்சிமுதலிய மூன்றனு ளடங்குவனவன்றி வேறுவனவல்லவென்பதாம்.

*இம்முறைபற்றி ஆகமமு மனுமானத்தி லடங்குமெனப் புத்தர் முதலாயினர் கூறுப; அஃததனுளடங்காதென்பது "நாலுரைத் தாரெருவனுளன்" என்னும் பரபக்கத்துச் செய்யுளானுணர்க.*

இது சொற்பொருட் பின்வருநிலை.

*இதனானே பிரமாண மினைத்தென்பது கூறப்பட்டது.* (1)

மாசறு காட்சி யையந் திரிவின்றி விகற்ப முன்னா
வாசற வறிவ தாகு மனுமான மவினா பாவம்
பேசுறு மேதுக் கொண்டு மறைபொருள் பெறுவ தாகுங்
காசறு முரையிம் மானத் தடங்கிடாப் பொருளைக் காட்டும்.

## சுப் — பதவுரை.

(அம்மூன்றனுள்) விகற்பம் முன்னா - நிருவிகற்ப வுணர்வைத் தனக்கு முன்னாகக்கொண்டு,—ஐயம் திரிவு இன்றி - ஐயவுணர்வும் விபரீதவுணர்வு மின்றி,—ஆசு அற

அறிவது – (விடயங்களை) நேரே யறியப்படுவதாகிய ஆன்மாவினது ஞானசத்தி,—மாசு அறு காட்சி ஆகும் —குற்றமற்ற காட்சியளவை யெனப்படும்,—மறை பொருள்-(அங்ஙன நேரே யறியப்படுவதன்றிச் சாதித்துப் பெறற் பாலதாய்) மறைந்து நின்ற பொருளை,—அவினு பாவம் பேசுறும் ஏதுக்கொண்டு — சொல்லப்பெற்ற (அதனை) விட்டு நீங்காது (யாண்டுமுடனுய் நிகழும்) ஏது வைக் கொண்டு,—(விகற்பம் முன்னு ஐயம் திரிவு இன் றிப்) பெறுவது–அவ்வாறு நிருவிகற்ப வுணர்வைத் தன க்கு முன்னுகக்கொண்டு ஐய விபரீதக் குற்றமின்றி யுணர் வதாகிய ஆன்மாவினது ஞானசத்தி,–அனுமானம் ஆகும் -கருதலளவை யெனப்படும்,–இம்மானத்து அடங்கிடாப் பொருளை — இவ்விரண்டு பிரமாணங்களாலும் அறியப் படாத (பரலோக பாதாளலோக முதலிய)பொருள்களை,– (ஆத்த வாக்கியங்கொண்டு) (விகற்பம் முன்னு ஐயம் திரிவு இன்றிக்) காட்டும்–அவ்வாறு நிருவிகற்பத்தைத் தனக்கு முன்னுகக்கொண்டு ஐய விபரீதக்குற்றமின்றி யுணரச்செய்வதாகியஆன்மாவினது ஞானசத்தி,— காசு அறும் உரை—குற்றமற்ற வுரையளவை யெனப்படும் என்க.

## சிவ — பொழிப்புரை.

எ-து. *அம்மூன்றனுள், நிருவிகற்பவுணர்வைத் தனக்கு முன்னுகக்கொண்டு ஐயவுணர்வும் விபரீதவுணர்வுமின்றி விட யங்களை நேரேயறிவதாகிய ஆன்மாவினது ஞானசத்தி காட்சி யளவையெனப்படும். அங்ஙனம் நேரேயறியப்படுவதன்றிச் சாதித்துப் பெறற்பாலதாய் மறைந்து நின்ற பொருளை அதனை விட்டுநீங்காது யாண்டு முடனுய்நிகழு மேதுவைக்*

கொண்டு அவ்வாறுணர்வதாகிய ஆன்மாவினது ஞானசத்தி கருதலளவையெனப்படும். இவ்விரண்டானுமறியப்படாத பொருள்களை ஆத்தவாக்கியங்கொண்டு அவ்வாறுணரச்செய்வதாகிய ஆன்மாவினது ஞானசத்தி உரையளவையெனப்படுமென்பதாம்.

*அடங்கிடாப்பொருள் பரலோக பாதாளலோக முதலாயின.*

*இம்மானத் தடங்கிடும் பொருளையும் ஆத்தவாக்கியங்கொண் டறிவது அருத்தவாதம்.*

*ஐயந்திரிவின்றி விகற்பமுன்னு வென்பதனை யாண்டுங் கூட்டி யுரைத்துக்கொள்க.*

*விகற்பமென்றது தலைக்குறை.*

*இதனுனே அம்மூன்றற்கும் இலக்கணங் கூறப்பட்டது.* (2)

கண்டபொருளை யிரட்டுறவே கருத லையந் திரிபவே, கொண்டறிரிவாம் பெயர்சாதி குணமே கன்மம் பொருளென வைந், துண்ட விகற்ப வுணர்வினுக்குப் பொருளி னுண்மை மாத்திரத்தின், விண்ட லில்லா வறிவாகும் விகற்ப மில்லாக் காட்சியே.

## சுப் — பதவுரை.

( மேற் கூறிப்போந்த நிருவிகற்பமுதலிய நான்கனுள் ) விண்டல் இல்லா – ( பெயர்முதலியவற்ருற் ) பகுத்தறித லின்றி,—பொருளின் உண்மை மாத்திரத்தின் அறிவு – ( இஃதொன்று தோன்ரு நின்றதெனப் )

பொருளுண்மை மாத்திரையே அறியு ஞானசத்தி—விகற்பம் இல்லாக்காட்சியே ஆகும்–நிருவிகற்பக்காட்சியெனப் படும்,—கண்ட பொருளை — அங்ஙனமறிந்த பொருளை,— இரட்டுறவே கருதல் — இஃது யாதோவென ஒன்றிற் றுணிவு பிறவா தாராயு ஞானசத்தி,—ஐயம்—ஐயக்காட்சி யெனப்படும்,— திரியவே கொண்டல் — அதனை யதனோ டொப்புமையுடைய வேறு பொருளாக மயங்கி நிச்சயிக்கு ஞானசத்தி,—திரிவு ஆம் - திரிவு காட்சியெனப் படும்,—பெயர் சாதி குணமே கன்மம் பொருள் என ஐந்து –பெயருஞ் சாதியுங் குணமுங் கன்மமும் பொருளுமாகிய ஐந்தும் (பொருடோறும் உண்மையின் அவ்வைந்தும் அப்பொருட்கணுள்ளவாறு இனிதுவிளங்க வுணரு ஞான சத்தி),—அ விகற்ப உணர்வினுக்கு உண்டு — அந்தச்சவி கற்பக்காட்சிக்கு உண்டென வுணரப்படும் என்க.

## சிவ — பொழிப்புரை.

*எ-து. மேற்கூறிப்போந்த நிருவிகற்பமுதலிய நான் கனுள், பெயர் முதலியவற்றாற் பகுத்தறிதலின்றி இஃ தொன்று தோன்றுநின்றதெனப் பொருளுண்மை மாத்திரை யே யறியும் ஞானசத்தி நிருவிகற்ப மெனப்படும். அங்ஙன மறிந்த பொருளை இஃதியாதோவென ஒன்றிற்றுணிவு பிற வா தாராயும் ஞானசத்தி ஐயமெனப்படும். அதனை அதனோ டொப்புமையுடைய வேறுபொருளாக மயங்கி நிச்சயிக்கும் ஞானசத்தி திரிவெனப்படும். பெயர்முதலிய வைந்தும் பொரு டோறுமுண்மையின் அவ்வைந்தும் அப்பொருட்கண்ணுள்ள வாறினிது விளங்க வுணரும் ஞானசத்தி சவிகற்ப மெனப்படு மென்பதாம்.*

4

முன்கண்ட வாதனைபற்றித் தோற்றுவதாகிய நினைவுணர்வு இவ்விடத்துக் கண்ட பொருளின்க ணிகழ்வதன்மையின், அதனை யீண்டெடுத்தோதி விலக்காராயினர்.

இதனானே காட்சிமுதலிய மூன்றினுஞ் சேறற்குரிய நிருவி கற்ப முதலிய நான்கினிலக்கணங் கூறப்பட்டது. (3)

**காண்டல் வாயின் மனந்தன்வே தனையோ டியோகக் காட்சியென, வீண்டு நான்கா மனுமானந் தனக்கும் பிறர்க்கு மென்றிரண்டா, மாண்ட வுரைதந் திரமந்திரத்தோ டுபதே சச்சொலெனமூன்றும், பூண்ட வளவைக் கெதிர்புலன்றன் னியல்பு பொதுவென் றிரண்டாமே.**

## சுப் — பதவுரை.

(அம்மூன்றனுள்) காண்டல்–காட்சியளவையாவது,– வாயிற் (காட்சி) – வாயிற் காட்சியும்,—மன (க்காட்சி)– மானதக் காட்சியும்,—தன்வேதனை (க்காட்சி) யோடு — தன் வேதனைக் காட்சியும்,—யோகக்காட்சியென–யோகக் காட்சியு மென,—ஈண்டு நான்காம் – இங்ஙன நான்கு வகைப்படும்,—அனுமானம் — கருதலளவையாவது,— தனக்கும் பிறர்க்கும் என்று — தன்பொருட் டனுமான மும் பிறர்பொருட் டனுமானமுமென,—இரண்டாம் — இரண்டு வகைப்படும்,—மாண்ட உரை - மாட்சிமைப் பட்ட வுரை யளவையாவது,— தந்திர (ச்சொல்) – தந்திரகலையும்,— மந்திரத்து(ச்சொல்)லோடு — மந்திர கலையும்,— உபதேசச்சொல் என–உபதேசகலையுமென,– மூன்றும் — மூன்று வகைப்படும்,-பூண்ட அளவைக்கு எதிர் புலன் – பொருந்திய இப்பிரமாணங்களான்

அறியப்படும் பிரமேயங்களதியல்பு,—தன் இயல்பு பொது (இயல்பு) என்று — சிறப்பியல்பு பொதுவியல்பென,— இரண்டாமே — இரண்டு வகைப்படும் என்க.

## சிவ — பொழிப்புரை.

எ-து. அம்மூன்றனுள், காட்சியளவை வாயிற்காட்சி முதல் நான்கு வகைப்படும்; கருதலளவை தன்பொருட்டுப் பிறர்பொருட்டென இருவகைப்படும்; உரையளவை தந்திர கலை முதன் மூவகைப்படும். இப்பிரமாணங்களானறியப்படும் பிரமேயங்களதியல்பு சிறப்பியல்பு பொதுவியல்பென இரு வகைப்படு மென்பதாம்.

இதனானே காட்சிமுதலிய மூன்றும் படும் பாகுபாடும், அவற்று னளக்கப்படும் பொருள்களின் பாகுபாடும், தொகுத்துக் கூறப்பட் டன. (4)

அன்னிய சாதி யுந்தன் சாதியு மகன்று நிற்ற
றன்னியல் பன்னி யத்தைத் தவிர்ந்துதன் சாதிக் கொத்த
றுன்னிய பொதுவி யற்கை சொன்னவிவ் விரண்டி னுள்ளே
மன்னிய பொருள்கள் யாவு மடங்கிடு மான முற்றால்.

## சுப் — பதவுரை.

(சிறப்பியல்பு பொதுவியல்பென்ற விரண்டனுள்) அன்னியசாதியும் - (ஒரு பொருட்கு) வேற்றுச் சாதிப் பொருளினும்,—தன் சாதியும்-தன் சாதிப்பொருளினும்,- அகன்று நிற்றல் - செல்லாது (தனக்கு மாத்திரையே யுரித்தாய்) நிலைபெறுந் தன்மை,—தன் இயல்பு - சிறப்

பியல்பெனவும்,—அன்னியத்தைத் தவிர்ந்து – வேற்றுச் சாதிப்பொருண் மாத்திரையிற் செல்லாது,—தன் சாதிக்கு ஒத்தல் — தன் சாதிப்பொருட் கெல்லாம் ஒப்ப நிலை பெறுந் தன்மை,— துன்னிய பொது இயற்கை – பொருந்திய பொது வியல்பெனவுங் கூறப்படும்,–மானம்-காட்சிமுதலிய பிரமாணங்களால்,— மன்னிய பொருள்கள்–பொருந்திய பிரமேயப்பொருள்களை, – உற்றால்— அறியலுறுமிடத்து,—யாவும் – அவையெல்லாம்,—சொன்ன இவ்விரண்டினுள்ளே அடங்கிடும் – ஈண்டுக் கூறிய இவ்விரண்டியல்பினுள் ஒன்று பற்றி அறியப்படும் என்க.

## சிவ — பொழிப்புரை.

எ-து. *சிறப்பியல்பு பொதுவியல்பென்ற இரண்டனுள், ஒருபொருட்கு வேற்றுச்சாதிப் பொருளினுந் தன்சாதிப் பொருளினுஞ் செல்லாது தனக்குமாத்திரையே யுரித்தாய் நிலைபெறுந்தன்மை சிறப்பியல் பெனவும், வேற்றுச்சாதிப் பொருண்மாத்திரையிற் செல்லாது தன்சாதிப்பொருட்கெல்லாம் ஒப்ப நிலைபெறுந்தன்மை பொதுவியல்பெனவுங் கூறப்படும். காட்சிமுதலிய பிரமாணங்களாற் பிரமேயப்பொருள்களை யறியலுறுமிடத்து அவையெல்லாம் இவ்விரண்டியல்பினு ளொன்றுபற்றி அறியப்படுமென்பதாம்.*

*எனவே, இவ்விரண்டின் வேறாகிய வேற்றியல்புபற்றி அறியப்படுமாயின், அவ்வறிவு பிராமாணியம் அன்றாய்ப் போமென்பதாயிற்று.*

*பிரமேயத்தை யறிந்தவறிவே தான் பிராமாணிய மென்பதனையு மறியுமெனவும், தான் பிராமாணியமாகாதவழி அவ்வாகாமை*

மாத்திரையே பிறிதொன்ரு னறியப்படுமெனவும், இவ்வாறன்றித் தனது பிராமாணியம் பிறிதொன்ருனறியப்படுவதேயென்னுந் தார்க்கிகர் முதலியோர் மதம் அடாதெனவுங் கொள்க.

இவற்றை வடநூலார் சுதத்துவம் பரதத்துவமென வழங்குப.

சாதியாவது ஒரு நிகரனவாகிய பலபொருட்குப் பொதுவாவ தோர் தன்மை,

இதனனே மேற்றன்னியல்பு பொதுவியல்பென்றவற்றி னிலக்கணங் கூறப்பட்டது.

இச்செய்யுள் சூசிகடாககயம்பற்றி முன் வைத்தவாறு. (5)

உயிரினே டுணர்வு வாயி லொளியுரு வாதி பற்றிச்
செயிருறு விகற்ப மின்றித் தெரிவதிந் திரியக் காட்சி
அயர்விலிந் திரிய ஞான மைம்புலன் சார்ந்து யிர்க்கண்
மயர்வற வந்த ஞான மானதக் காண்ட லாமே.

## சுப் — பதவுரை.

(மேற்கூறிப்போந்த காட்சி நான்கனுள்ளும்) உயிரின் – (தன்னை நோக்கி நிற்கு மறிவாகிய) ஆன்மாவினின்றும்,—ஓடு உணர்வு – (விடயங்களை நோக்கி) ஓடு மறிவாகிய சிற்சத்தி,—வாயில் – கண்முதலிய பொறிகளையும்,—ஒளி (ஆதி) – (அவற்றிற்குத் துணையாய் வலிசெய்துடனிற்குந்) தேயுமுதலிய பூதங்களையும்,—உரு ஆதி பற்றி – (அப்பூதங்களுக்கு முதற்காரணமாய் அவற்றை விட்டு நீங்குதலின்றி யுடனுகிய) உருவமுதலிய தன்மாத்திரைகளையும் அதிட்டித்துக்கொண்டு,—செயிர் – ஐய

விபரீதக்குற்றங்களும்,—உறு விகற்பம் இன்றி – பொருந்திய பெயர் சாதிமுதலிய விகற்பமுமின்றி,—தெரிவது—(உருவமுதலிய வைம்புலன்களை நிருவிகற்பமா) யறியுமறிவு,—இந்திரியக் காட்சி – வாயிற் காட்சியெனப்படும், —ஐம்புலன் சார்ந்து - அங்ஙன மைம்புலன்களை இயைந்தறிந்த பின்னர்,—அயர்வு இல் — மீள மறத்தலின்றி,—இந்திரிய ஞானம் — (சித்தத்தாற் சிந்திக்கப்பட்டு நிலைபெறுவதாகிய அவ்)வாயிற் காட்சியறிவு,—மயர்வு அற—(பெயர் சாதி முதலியவற்றான்) விபரீதமாதலின்றி (நிச்சயமாய்),— உயிர்க்கண் — புத்தி தத்துவத்தின்கண்,— வந்த ஞானம்—வருதலானுகிய சவிகற்பவுணர்வாய் உயிரினேடுணர்வு தெரிவது,—மானதக் காண்டல் ஆமே – மானதக் காட்சி யெனப்படும் என்க.

## சிவ — பொழிப்புரை.

*எ-து. மேற்கூறிப்போந்த காட்சி நான்கனுள்ளும், தன்னை நோக்கிநிற்கு மறிவாகிய ஆன்மாவினின்றும் விடயங்களை நோக்கியோடுமறிவாகிய சிற்சத்தி, கண்முதலிய பொறிகளையும், அவற்றிற்குத் துணையாய் வலிசெய்துடனிற்குந் தேயுமுதலிய பூதங்களையும், அப்பூதங்களுக்கு முதற்காரணமாய் அவற்றைவிட்டு நீங்குதலின்றி உடனுயவுருவமுதலிய தன்மாத்திரைகளையு மதிட்டித்துக்கொண்டு, ஐய விபரீதக் குற்றங்களும் பெய்ர் சாதி முதலிய விகற்பமுமின்றி, உருவ முதலிய வைம்புலன்களை நிருவிகற்பமாயறியுமறிவு வாயிற் காட்சியெனப்படும்; அங்ஙனமைம்புலன்களை இயைந்தறிந்த பின்னர் மீள மறத்தலின்றிச் சித்தத்தாற் சிந்திக்கப்பட்டு நிலைபெறுவதாகிய அவ்வாயிற்காட்சியறிவு, பெயர் சாதி*

முதலியவற்றான் விபரீதமாதலின்றி நிச்சயமாய்ப் புத்திதத்துவத்தின்கண் வருதலாகிய சவிகற்பவுணர்வாய் உயிரினோடுணர்வு தெரிவது மானதக்காட்சியெனப்படுமென்பதாம்.

ஐம்புலன்சார்ந் தயர்விலிந்திரிய ஞானமென மாறுக.

இன் ஐந்தா முருபு.

ஒடுணர்வு வினைத்தொகை,

ஒளி ஆகுபெயர். ஆதியென்பதனை ஒளியோடுங் கூட்டுக,

சார்ந்தபினென்பது சார்ந்தெனத் திரிந்து காரியத்தின் மேனின்றது.

உயிர்க்குப் பற்றுக்கோடாகிய புத்தியை உயிரென்றுபசரித்தார்.

வந்தஞானமென்னும்பெயரெச்சம் 'ஆறுசென்றவெயர்' என்றாற்போல நின்றது.

மனத்தின் றொழிற்பாடு முன்னாக நிகழ்தலின் மானதக்காட்சி யெனப்பட்டது.

அதிகாரமுறைமை யென்னுமுத்தியான் உயிரினோடுணர்வு தெரிவதென்பதனை அளவையதிகார முழுதினு முய்த்துரைக்க.

இதனானே வாயிற்காட்சி மானதக்காட்சிகளி தியல்பு கூறப்பட்டது. (6)

அருந்தின்பத் துன்ப முள்ளத் தறிவினுக் கராக மாதி
தருந்தன்வே தனையாங் காட்சி சமாதியான் மலங்கள் வாட்டிப்
பொருந்திய தேச கால வியல்பகல் பொருள்க ளெல்லா
மிருந் துணர் கின்ற ஞான மியோகநற் காண்ட லாமே.

## சுப் — பதவுரை

( அம்மானதக்காட்சி விசேடம்பற்றி மேம்பட்டு நிகழுஞ் சத்துவகுண முதலியவற்றின் விளக்கமாகிய ) அருந்து இன்பத் துன்பம் – நுகரப்படு மின்பத்துன்பங் கள்,— உள்ளத்து அறிவினுக்கு — புருடனதறிவிற்கு (விடயமாம்படி),—அராகம் ஆதி தரும் – அராக முதலிய வைந்து தத்துவங்களானும் புணர்க்கப்படுவதனை உயிரினோடுணர்வு தெரிவது,— தன் வேதனைக் காட்சி ஆம் –தன்வேதனைக் காட்சி யெனப்படும்,—மலங்கள் – (இவ் வாறன்றி)அறிவைத் தடைசெய்து நின்ற)மலசத்திகளை,– சமாதியான் வாட்டி - இயமம் நியம முதலிய அட்டாங்க யோக சமாதியான் ஒருவாறு கெடுத்து,-இருந்து– (ஓரிடத் தொருகாலத்) திருந்தாங்கிருந்து,—பொருந்திய தேச கால இயல்பு அகல் பொருள்கள் எல்லாம் — பொருந்தப்பட்ட மூவிடத்து முக்காலத்தும் இயல்பாக விரிந்த பொருள்க ளெல்லாவற்றையும்,—உணர்கின்ற ஞானம்—காண்கின்ற காட்சியாய் உயிரினொடுணர்வு தெரிவது,—நல் யோகக் காண்டல் ஆமே — நன்மையாகிய யோகக் காட்சி யென்ப்படும் என்க.

## சிவ — பொழிப்புரை.

எ-து. *அம்மானதக்காட்சி விசேடம்பற்றி மேம்பட்டு நிகழுஞ் சத்துவகுண முதலியவற்றின் விளக்கமாகிய இன்ப த்துன்பங்கள் புருடனதறிவிற்கு விடயமாம்படி அராக முதலிய வைந்து தத்துவங்களானும் புணர்க்கப்படுமதனை உயிரினோடுணர்வு தெரிவது தன்வேதனைக்காட்சி யெனப் படும்; இவ்வாறன்றி அறிவைத் தடைசெய்துநின்ற மலசத்தி*

